# பழனித் திரிவு மஞ்சரி யமக அந்தாதி



வண்ணச்சரபம்
அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்

## உரையுடன்

பதினறுவது

# திரிவு மஞ்சரி

## கட்டளைக் கலித்துறை

நீராவி னன்குடி யென்றுங்கொண் டாற்கன்று நீயுணர்த்தும்
பேராவி னன்குடி முற்றுய்யு மாறு பிறங்கச்செய்வாய்
காராவி னன்குடி லைத்தோனி யஞ்சிக் கரங்குவிக்கும்
சீராவி னன்குடி யானே கலாபச் சிகாவளனே.

*நீரா-தன் இயல்புக் குணமாக*
*இனன்-சூரிய வட்டத்தை*
*குடி-இருப்பிடமாக*
*என்றும்-எப்போதும்*
*கொண்டாற்கு-பெற்றசிவபிரானுக்கு*
*அன்று-அக்காலத்தில்*
*நீ உணர்த்தும்-நீ அறியக் கூறிய*
*பேறு-பெரும்பொருளை*
*ஆவி-என் உயிரும்*
*நன்குடி-என் ஆன்மஇனத்தர்*
*முற்று-எல்லோரும் பெற்று*
*உய்யுமாறு-நலமடையும்படி*
*பிறங்கச் செய்வாய்-உபதேசித்தருள்க*
*கார்-கறுப்புநிறமுடைய*
*ஆவினன்-எருமைக்குரிய எமன்*
*குடிலைத்தொனி-அன்பர்பிரணவத்தோடு கூறும் நாமஒலி கேட்டு*
*அஞ்சி-உள்ளச்சமுற்று*
*கரம்-தன் இருகைகளையும்*
*குவிக்கும்-கூப்பிவணங்கிஅகலும்*
*சீர்-சிறப்புமிக்க*
*ஆவினன்குடியானே-திருவாவினன் குடிக்கோயிலுடையவனே*
*கலாப-அழகிய தோகையைக் கொண்ட*
*சிகாவளனே-மயில்வாகனப்பெருமானே.*
*எ-று.* 1

துமுனி மலைய முனியாதி யாயமெய்த் தொண்டர்மலர்க்
குழனி மலைமடி மேலெண்ணும் நின்னைக் குறித்துநின்றேன்
கழனி மலைகரிச் சாரல் நகரங் கவின்தருசீர்ப்
பழனி மலைக்குக னேஅடி யேனைக்கண் பார்த்தருளே.

*துமுனி-தமிழின் இனியஒலிசிறந்த*
*மலய-பொதியை மலைக்குரிய*
*முனிஆதியாய-அகத்தியர்முதலிய*
*மெய்த்தொண்டர்-உண்மையன்பர்கள்*
*மலர்க்குழல்-பூவணிந்த கூந்தலுள்ள*
*நிமலை-உமையவளது*
*மடிமேல்-மடிமீதிருக்கும் குழவியாக*
*எண்ணும்-கருதிவழிபடுகின்ற*
*நின்னைக்குறித்து-உன்னை எண்ணி*
*நின்றேன்-ஒருநிலையில் நிற்கின்றேன்*
*கழனி-வயல்களின் சூழலும்*
*மலை-மலையின் தொடர்பும்*
*கரி-யானைகளின் கூட்டமும்*
*சாரல்-மேகத்தின் மழைத்தூறல்*
*நகரம்-கோயிற்சிறப்பு*
*கவின்தரு-மிகுந்துள்ளதுமாகி*
*சீர்-மகிமைபெற்ற*
*பழனிமலை-பழனிமலையில் விளங்கும்*
*குகனே-முருகப்பெருமானே*
*அடியேனை-தொண்டனாகிய என்னை*
*கண்பார்த்து-கடைக்கண் நோக்கி*
*அருளே-ஆட்கொள்ள வேண்டும்.*
*எ-று.* 2

பெருவாவி னன்குடி வாழ்வுறச் சூரற் பிளந்ததினும்
குருவாவி னன்குடில் நீத்துவந் தென்னைக் கோளலரிதோ
கருவாவி னன்குடி லங்கல்அன் னோர்க்குங் கருணைசெய்யும்
திருவாவி னன்குடிச் சேயே குறைவில் சிவானந்தனே.

பெரு-பெருமையிற் சிறந்த
உவாவினன்-வெள்ளையானை யுடைய தேவேந்திரன்
குடிவாழ்வுற-குலம் வாழவேண்டி
சூரன்-சூரனை மாமரத்தை
பிளந்ததினும்-வேலாற் கூறிட்டதைவிட
குருவா-சற்குருநாதனாக
இனன்-சூரியன் உலவும்
குடில்-ஆகாயத்தின்பால்
நீத்து-அருவமாதலைவிட்டு
வந்து-உருவுடனே வந்து
என்னை-அடியேனை
கோளல்-ஏற்றுக்கொள்வது
அரிதோ-அரிய செயலாகுமா
கரு-கருப்பு நிறமுடைய
உவாவினன்-இளையனை மலமதனுக்கும்
குடிலம்-நாகத்தையும்
கல்-பாறைக்கல்லையும்
அன்னோர்க்கும்-ஒப்பானசிலர்க்கும்
கருணை-திருவுளக்கருணையை
செய்யும்-அன்பாற்புரிகின்ற
திருவாவினன் குடி-திருவாவினன் குடிக்கோயிலில் உள்ள
சேயே-முருகக்கடவுளே
குறைவில்-குறைவற்ற
சிவானந்தனே-பேரின்பப் பெருமானே.
எ-று. 3

பொருப்பழ னின்ற பதிக்கோ புரத்திற் புகன்றநின்சொல்
விருப்பழ னித்தநின் மீதவ தூறு விளம்புகின்றேன்
குருப்பழ னித்திலக் கோத்தன்ன வெண்பற் குறத்திபுணர்
திருப்பழ னிக்குரு நாதாவந் தாண்டருள் சீக்கிரமே.

பொருப்பு-மலைவடிவாக
அழல்நின்ற-நெருப்புள்ளதலமான
பதி-திருவண்ணாமலையின்
கோபுரத்தில்-கோபுரத்திளையனார் சந்நிதியில்
புகன்ற-கூறியருளிய
நின்சொல்-உனது திருவார்த்தைகள்
விருப்பு-ஆசைப்படி (நடவாததால்)
அழல்-தீப்போல வருத்தமிக்கு
நித்தம்-நாள்தோறும்
நின்மீது-உன்மீது (ஊடலால்)
அவதூறு-பழிமொழிகளை
விளம்புகின்றேன்-கூறலானேன்
குரு-ஒளி வீசுவதும்
பழ-முதிரவிளைந்ததுமான
நித்திலக்கோத்து-முத்தின்கூட்டம்
அன்ன-ஒப்பான
வெண்பல்-வெண்ணிறப்பற்களுடைய
குறத்திபுணர்-வள்ளிநாயகி தழுவும்
திருப்பழனி-அழகிய பழனிப் பதியின்
குருநாதா-சற்குருநாதனே
சீக்கிரமே-விரைவில்
வந்து-முன்தோன்றி
ஆண்டருள்-ஆளாக ஏற்கவேண்டும்.
எ-று. 4

நஞ்சேவ லங்கோள் திருநோக்குள் ளார்மிசை நாட்டமிஞ்சிக்
கெஞ்சேவ லங்கொடி யாரிடம் போய்ப்பொருள் கேட்டுநொந்தேம்
உஞ்சேவ லங்கோ டிமையார் பராவ ஒளிர்வதென்றோ
செஞ்சேவ லங்கொடிச் சீர்ப்பழ னுபுரித் தேசிகனே.

நஞ்சு-விடத்தையும்
ஏவு-அம்பையும் போன்று
அலம்கொள்-துன்பம் செய்வதையுடைய
திருநோக்கு-அழகிய பார்வையை
உள்ளாரிடம்-உடைய மாதரது
நாட்டம்-ஆசையானது
மிஞ்சி-அதிகப்பட்டு
கெஞ்சு-கெஞ்சியும்
ஏவல்-சொற்படி நடந்தும்வாழும்
அ-கொடியாரிடம்-அந்தக் கொடியவர் முன்
போய்-விரும்பிச்சென்று
பொருள்கேட்டு-பொருள் தரக் கேட்டு
நொந்தேம்-தராமையால் வருந்தினோம்
உய்ந்தே-அதைவிட்டுநன் றவாழ
வலங்கொடு-உனை நல் வலமாய்ச் சுற்று
இமையோர் பராவ-தேவர் புகழுமாறு
ஒளிர்வது-யான் தெளிவடைவது
என்றோ-எக்காலமோ
செம்-செந்நிறமான
சேவல்-சேவல் வரைந்த
அங்கொடி-அழகிய கொடியின்
சீர்-மேன்மை மிக்க
பழநுபுரி-பழனிக்கிறைவனான
தேசிகனே-சற்குருமூர்த்தியே.
எ-று. 5

அகிவாக னங்கையிற் சங்காழி யான்அயன் அண்டர்,தோண்டர்
மகிவாக னந்தம் பெறச்சூர்ச்செற் றாய்என்றன் வம்புமுற்றும்
சகிவாக னத்த அநுபூதி நல்கிநிற் சாரச்செய்பொற்
சிகிவாக னப்பெரு மானே பழனிச் செயசித்தனே.

அகி-பாம்பினையணிந்த
வாகன்-தோளையுடைய சிவன்
அம்கையில்-அழகிய கையில்
சங்கு-சங்கையும்
ஆழியான்-சக்கரமும் உடைய திருமால்
அயன்-பிரமன்
அண்டர்-தேவர்கள்
தொண்டர்-அடியார்கள்
மகி-உலகமக்கள் யாவரும்
வாகு அனந்தம்-பலவெற்றியை
பெற-அடையும்படி
சூர்-சூரபன்மனை
செற்றாய்-கொன்றவனே
என்றன்-என்னால் வரக்கூடிய
வம்புமுற்றும்-பல தவறுகளையும்
சகி-பொறுக்கவேண்டும்
வா-முன்னிலையாக வரவேண்டும்
கனத்த-பெரிதான
அநுபூதி-உன் அருட்காட்சியை
நல்கி-யான்பெற உதவி
நின்-உன்னுடன் ஒன்றாக
சாரச்செய்-கலந்திருக்கச்செய்ய வேண்டும்
பொற்சிகி-அழகிய மயிலின்
வாகனா-வாகனமுடைய
பெருமானே-புகழ்ப் பெருமானே
பழனி-பழனியில் இருந்த
செய-வெற்றிமிக்க
சித்தனே-திருவருளாட்டுடையவனே.
எ-று. 6

அந்தக ராளர் அனேகர்வந் தாலும் அடக்கும்வலி
தந்தக ராளரி அன்னா னெனஎன் றனைப்புரப்பாய்
வெந்தக ராள குணத்தாற் கனலில் விரைந்துதித்த
செந்தக ராளவல் லாய்வய லூர்ச்சிவ தேசிகனே.

அந்தகர்-இயமனுடைய
ஆளர்-தூதர்கள்
அனேகர்-பலர்கூடி
வந்தாலும்-நேரேவந்தாலும்
அடக்கும்-அவரை அஞ்சி அகலச் செய்யும்
வலி-தவச்சிறப்பை
தந்து-யான் பெற உதவி
அ-அந்த
கரு-நீலமேக மேனியனாகி
ஆளரி-நரசிங்கவடிவான திருமாலை
அன்னான்என-ஒப்பானவனென்று கூறும்படி
என்றனை-அடியேனை
புரப்பாய்-காத்தருளவேண்டும்
வெந்த-கொடிய கூச்சலோடு
கராள-அஞ்சும்படி-தாவும்
குணத்தால்-குணத்துடன்
கனலில்-வேள்வித்தீயில்
விரைந்து-வேகமாக
உதித்த-தோன்றிய
செம்-செந்நிறமான
தகர்-ஆட்டுக்கடாவை
ஆள-அடக்கி வாகனமாக்கும்
வல்லாய்-வல்லமையுடையவனே
வயலூர்-பழனியில் உள்ள
சிவதேசிகனே-சிவகுருநாதனே
எ-று. 7

ஈனக் கரியன்ன புன்னெஞ்ச மாந்தர் இகழநொந்த
நானக் கரியன்மெய்ப் பேறுற வேட்பது ஞாயமன்றோ
வானக் கரிய துணையாய் அயத்தோடு வால்வரைநேர்
ஞானக் கரியதும் ஊர்வாய் பழனி நகர்க்கந்தனே.

ஈன-இழிந்த
கரிஅன்ன-அடுப்புக்கரிபோன்று
புன்-கேவலமான
நெஞ்ச-எண்ணமுடைய
மாந்தர்-மக்களானவர்
இகழ-தாழ்வுறப்பேசுவதால்
நொந்த-மனம் வருந்திய
நான்-அடியேன்
அ-அந்த
கரியன்-திருமாலைப்போல
மெய்ப்பேறு-உலகநலம்புரியும் நன்மையை
உற-பெறவேண்டுமென்று
வேட்பது-விரும்புவது
ஞாயமன்றோ-தக்கதல்லவா
வானக்கு-வானுலகத் தேவருக்கு
அரியதுணையாய்-தக்க உதவியாய்
அயத்தொடு-ஆட்டுடன்
வால்வரை-வெள்ளைமலையை
நேர்-ஒப்பான-பெரிய
ஞான-ஞானவேழமென்ற
கரியதும்-யானையையும் வாகனமாக
ஊர்வாய்-செலுத்தியவனே
பழனி நகர்-பழனிப்பதிக்கேற்ற
கந்தனே-கந்தப் பெருமானே.
எ-று. 8

புயலூர வாவொழி யான்முத லோர்வந்து போற்றத்தக்க
செயலூர வாழ்வும் பிறர்க்கீயு மாறெனைத் தேற்றிக்கொள்வாய்
கயலூர வால்வளை அஞ்சி யிவரும் கமலமலி
வயலூர வாவு மரகதத் தோகை மயூரத்தனே.

*புயல்-ஏழுமேகங்களையும்*
*ஊர்-வாகனமாகச்செலுத்தும்*
*அவா-ஆசையானது*
*ஒழியான்-நீங்காதஇந்திரன்*
*முதலோர்-முதலியதேவர்கள்*
*வந்து-அன்புடன்வந்து*
*போற்றத்தக்க-வணங்கற்கேற்ற*
*செயலூர்-அருள்பொருந்திய*
*அவ்வாழ்வும்-அவ்வாய்ப்பையும்*
*பிறர்க்கு-(நான்மட்டுமின்றி) பிறருக்கும்*
*ஈயுமாறு-கொடுக்கத்தக்கபடி*
*எனை-அடியேனை*
*தேற்றி-தவச்சிறப்பமையுமாறு*
*கொள்வாய்-ஏற்றருளவேண்டும்*
*கயலூர-மீன்கள் உலாவுதலால்*
*வால்வளை-வெண்ணிறச்சங்குகள்*
*அஞ்சி-அச்சமெய்தி*
*இவரும்-ஏறிஇருக்கும்படி*
*கமலம்-தாமரைமலர்கள்*
*மலி-அதிகம் பூத்துள்ள*
*வயலூர-வயற்சிறப்புடைய பழனிப்பதியானே*
*வாவு-தாவிப்பறக்கும்*
*மரகத-பச்சைநிறமான*
*தோகை-தோகையழகுடைய*
*மயூரத்தனே-மயில் வாகனப்பெருமானே*
*எ-று.* 9

வெந்தனக் குன்றலில் வேடரும் போற்றும் வியன்பழனிக்
கந்தனக் குன்ற னடியாரை யெள்ளுங் கயவர்க்கஞ்சி
நொந்தனக் குன்றவந் தானுமில் லாரில் நுடங்கவிடேல்
சந்தனக் குன்ற முனிக்கீந்த மெய்ப்பொருள் தந்தருளே.

*வெம்தனம்-கொடியகுணம்*
*குன்றல்இல்-குறைவுபடாத*
*வேடரும்-மலைநிலமாக்களும்*
*போற்றும்-வணங்கத்தக்க*
*வியன்பழனி-சிறந்தபழனியின்*
*கந்த-கந்தக்கடவுளே*
*நக்கு-பரிகாசச்சிரிப்புடன்*
*உன்றன் அடியாரை-உனதன்பரை*
*எள்ளும்-இகழ்ந்துபேசுகின்ற*
*கயவர்க்கு-கடையர்களைக்கண்டு*
*அஞ்சி-அச்சமுற்று*
*நொந்தனக்கு-வருந்தியஎனக்கு*
*உன்-உன்னைநினைத்துவணங்கும்*
*தவந்தானும்-தவப்பயனுங்கூட*
*இல்லாரில்-இல்லாதவரைப் போல*
*நுடங்க-வருந்தும்படி*
*விடேல்-என்னைவிடக்கூடாது*
*சந்தன-சந்தனமரம்சூழ்ந்த*
*குன்ற-பொதியைமலையினரான*
*முனிக்கு-அகத்தியருக்கு*
*ஈந்த-உபதேசித்ததான*
*மெய்ப்பொருள்-உண்மைப் பொருளை*
*தந்து-அடியேன்பெறஉதவி*
*அருள்-திருவருள்புரியவேண்டும்*
*எ-று. ஏ-அசை.* 10

வெம்மல வாதனை நீக்காத மாண்புறும் வீரவைவேற்
செம்மல வாதனை யத்தோர் குரவன், சிருட்டிசெய்யும்
கம்மல வாதனை நீடும் பழனி கருதுநர்க்கு
மும்மல வாதனை யுந்தீர்த்துச் சந்ததம் முன்னிற்குமே.

வெம்-கொடுமையான
மல்-போர்புரிகின்ற
அவாதனை-விருப்பத்தை
நீக்காத-மாறப்பெறாத
மாண்புறும்-வீரமுடைய
வீர-வெற்றிமிக்க
வைவேல்-கூரிய வேலாயுதனை
செம்மல்-செவ்வேட்பெருமான்
அ-சங்கமிருந்த அவ்விடத்தில்
வாத-சொற்போர் செய்த
நயத்தோர்-புலவர்கள் போற்றும்
குரவன்-புலவரரசன்
சிருட்டி செய்யும்-படைத்தலைப் புரியும்
கம்-பிரமனை
அல-தன் புறக்குட்டி ஆண்ட
ஆதன்-குருவானவன்
ஐநீடும்-அழகுமிகுந்த
பழனி-பழனியம்பதியை
கருதுநர்க்கு-நினைப்பவர்க்கு,
மும்மல-ஆணவமுதலானவற்றின்
வாதனையும்-துயரத்துடன் மற்ற இடர்களையும்
தீர்த்து-இல்லாமற்போக்கி
சந்ததமும்-எப்போதும்
முன்-அவர்கட்கெதிரில்
நிற்கும்-நின்றுகாட்சிதந்தருள்வான்
எ-று. ஐ-அசை. 11

தவகுரு நாதந்த தோத்திரங் கொண்டும்பர் சாவொழித்தாய்
பவகுரு நாதமென் றண்டுந் தகுவர் பலரையட்டாய்
குவகுரு நாதமட் டாய்க்கடந் தாய்நலங் கூர்பழனிச்
சிவகுரு நாதவென் றீவினை தீர்த்தருட் சீரருளே.

தவ-தவச்சிறப்புற்ற
குரு-வியாழபகவான்
நா-தமது நாவினால்
தந்த-செய்யப்பெற்ற
தோத்திரம்-துதிச்சொற்களை
கொண்டு-ஏற்றருளி
உம்பர்-தேவர்கட்குற்ற
சாவு-இறப்பினை
ஒழித்தாய்-மாற்றியருளினாய்
பவ-பாவச்செயல்கட்கு
கு-விளைநிலமாய்
உரும்-இடியினது
நாதம்-பேரொலியே
என்று-என்னும்படி ஆரவாரித்து
அண்டும்-நெருங்கிவந்த
தகுவர்-அசுரர்கள்
பலரை-பலபேரை
அட்டாய்-கொன்றருளினாய்
கு-மண் உலகமுதலாக
வகு-வகுத்துக்கூறும்
உரு-ஒன்பதுபேதமான
நாதமட்டாய்-நாதத்தத்துவம் வரையாயும்
கடந்தாய்-மேலும்பரந்துநின்றாய்
நலம்கூர்-நன்மைமிக்க
பழனி-பழனியில் விளங்கி
சிவ-சிவபிரானுக்கும்
குரு-குருவாயுள்ள
நாத-தலைவனே
என்-அடியேனது
தீவினை-கொடியவினைகளை
தீர்த்து-அறப்போக்கி
அருள்-உன் திருவருளின்
சீர்-செல்வத்தை
அருள்-கொடுக்கவேண்டும்
எ-று. ஏ-அசை. 12

கண்ணு மலைக்கிளி லங்கு முலையைக் கருதிநையப்
பண்ணும லைக்கிளி சாரா தளிக்கும் பதமருள்வாய்
தண்ணு மலைக்கிளி முந்நீரிற் சந்தத் தமிழெறிந்த
அண்ணு மலைக்கிளி யானே பழனி அமர்குகனே.

கண்ணு-(கண்போன்றதும்
கண்களையுடையதும்
மலை-மலைபோன்றதும்
கிள்-கிள்ளியின்புறுவதுமாக
இலங்கு-விளங்குகின்ற
முலையை-மாதர்தனங்களை
கருதி-அடையஎண்ணி
நைய-மனம்வருந்தும்படி
பண்ணுமல்-என்னைச்செய்யாமல்
ஐக்கு-உன்மீதுஅன்புற்ற
அழுக்கு
இளிசாராது-இழிவுவாராமல்
அளிக்கும்-அருள்செய்கின்ற
பதம்-திருவடியைச்சூட்டி
அருள்வாய்-ஆட்கொள்ள
வேண்டும்
தண்-குளிர்ச்சியும்
நாம்-அச்சமும்
அலை-அலைப்பெருக்கமும்
கிளி-கிளிஎன்றமீன்கூட்டமும்
உடைய
முந்நீரில்-கடலினிடத்து
சந்த-சந்தங்களான
தமிழ்-திருப்புகழ்முதலியவற்றை
எறிந்த-வீசியவரான
அண்ணுமலை-திருவண்ணுமலையில்
இருந்த
கிளியானே-அருணகிரிநாதரான
கிளியைஅணிந்தவனே
பழனி-பழனியம்பதியில்
அமர்-எழுந்தருளியுள்ள
குகனே-குகப்பெருமானே
எ-று. 13

தந்தரத் தேவர்க்கும் வேண்டுவ செய்கிலர் தம்மைக்கெஞ்சி
நொந்தரத் தேவதிற் றோன்றுங்கண் ணார்முன் நுடங்கல்நன்றே
கந்தரத் தேவழங் குந்திறம் ஈகுதி, கண்ணிமையா
அந்தரத் தேவர் தலைவா பழனி அசலத்தனே.

தம்-தமது
தரத்த-தகுதிக்கு ஏற்றபடி
எவர்க்கும்-எல்லோருக்கும்
வேண்டுவ-தேவையானதை
செய்கிலர்-உதவாதுள்ள
தம்மை-உலோபிகளை
கெஞ்சி-இரந்து
நொந்து-வருந்தியும்
அரத்து-அரம்போலவும்
ஏ அதில்-அம்பைப்போலவும்
தோன்றும்-விளங்குகின்ற
கண்ணார்முன்-கண்ணுடைய
மாதர்முன்
நுடங்கல்-முட்டுப்படுவதும்
நன்றே-நலமாகுமா
கந்தரத்தே-மேகம்போல
வழங்கு-பலன்குறியாமல் உதவும்
திறம்-பெருந்தன்மையை
ஈகுதி-கொடுத்தருளவேண்டும்
கண்-தம்கண்களை
இமையா-அசைத்தலில்லாத
அந்தர-வானுலகத்தவரான
தேவர்-தேவர்கள்பலருக்கும்
தலைவா-முதல்வனே
பழனி-பழனியம்பதியில்உள்ள
அசலத்தனே-மலைக்குரியவனே
எ-று.
14

அமலா தனனையக் தேங்குகின் றேனை அகற்றலரு
முமலா தனைனைத்த பஞ்சாகச் செய்குதி! மூரிவைவேற்
சமலா தனனையர் சீர்வய லூர! சதுமறைதேர்
கமலா தனனைப் புடைத்தாய் குன் றுமெய்க் கருணையனே.

அம்-அழகுதரும்செயல்
அலாதன-அல்லாதவற்றை
நயந்து-செய்யவிரும்பி
ஏங்குகின்றேனை-இரங்குமென்னை
அகற்றல்-தள்ளவேண்டாம்
அரு-விட்டுநீங்காதுள்ள
மும்மல-மும்மலத்தொடர்புற்ற
ஆதன்-குற்றமுடையவன்
ஆதலால்
நனைத்த-(காற்றிற் பறக்காதபடி)
நீரில்நனைக்கப்பட்ட
பஞ்சாக-பஞ்சைப்போல
செய்குதி-உன்அன்பில்தோயப் [புரிக
மூரி-பெருமைமிக்க
வைவேல்-கூரியவேலாயுதம்
உடைய
சமலா-மாயையற்றபெருமானே
தனர்-குபேரன்போன்றசெல்வர்
அயர்-விரும்பிவருகின்ற
சீர்-சிறப்புடைய
வயலூர-பழவப்பதியானே
சதுமறை-நால்வேதங்களையும்
தேர்-கசடறக்கற்ற
கமலாதனனை-பிரமதேவனை
புடைத்தாய்-குட்டிச்சிறையிட்ட
குன்று-குறைவுபடாத [வனே
மெய்-உண்மை
கருணையனே-திருவருளுடைய
வனே!
15

திங்கணைச் செங்கர கத்தாளத் தாடிய சித்தர்களாம்
அங்கணைச் செங்கரம் போலுங்கண் ணார்க்கய ராதருள்வாய்
வங்கணைச் செங்கர ணத்தார் பழனி மலைபுரக்கும்
கங்கணைச் செங்கரம் ஈராறு கொண்டவிர் கந்தப்பனே

திங்கணை-திங்கணை என்ற
ஒலியுடன்
செங்கர-செம்மையானகைகளால்
கம்-மகிழ்வுடன்
தாளத்து-தாளமிட்டு, அன்பினால்
ஆடிய-பரவசமாய் ஆடிப்பாடு
சித்தர்களாம்-மனமுடைய [கின்ற
அடியவர் ஆகிய
அங்கணம்-அழகியமுற்றக்
கூட்டத்தார்
செங்கரம்-கொடியவிடத்தினை
போலும்-ஒப்பான
கண்ணார்க்கு-கண்ணுடைய
மாதர்களிடம்
அயராது-சோர்வடைந்து
வருந்தாமல்
அருள்வாய்-காப்பாற்ற
வங்கண-நேசமிக்க வேண்டும்
செம்-செம்மையான
கரணத்தார்-அந்தக்கரண சுத்த
முடையவர் கூடும்
பழனி-பழனிப்பதியின்
மலை-மலைக்கோயிலுள்ளிருந்து
புரக்கும்-உலகைப் பாதுகாக்
கின்றதான
கங்கண-கடகம் புனைந்த
செங்கரம்-அழகிய கைகள்
ஈராறு கொண்டு-பன்னிரண்டு
அவிர்-விளங்குகின்ற டன்
கந்தப்பனே-கந்தக்கடவுளே
எ-று.
16

மண்டம் ணைந்த கையவாரி யாமரம் மாயஅட்டான்
விண்டம் புணைந்தகை தோய்ந்தான், விளாவில்லம் வெண்மதியத்
துண்டம் புணைந்தகை தீர்சடை யான்மைந்தன் தோமில்கோற்றத்
தண்டம் புணைந்தகை யானே பழனித் தலத்தண்ணலே.

மண்டு-மிகுந்து நிறைந்த
அம்பு-நீரானது (கடலின்)
னைந்து-கலங்கி
அகைய-வருந்தும்படி
வாரி-கடலில் தோன்றிய
மாமரம்-சூரனான மாமரத்தை
மாய-அழியும்படி
அட்டான்-வேலை விட்டவன்
விண்டு-திருமால்
அம்-அழகுபெற (தேவர்களிடம்)
புணைந்த-எடுத்தோதிய
கை-வரிசையான புகழை
தோய்ந்தான்-உடைய கடவுள்
விளாவில்வம்-விளா இலை வில்வம்
வெண்மதியத் துண்டம்-இளம் பிறைச் சந்திரன்
புல்-அறுகு இவற்றைப் புணைந்து
கைதைதீர்-இகழ்தலற்ற
சடையான்-சடைப்பரன் அருளிய
மைந்தன்-குமாரன்
தோம் இல்-குற்றமற்றதும்
கொற்ற-வெற்றியுற்றதும் ஆன
தண்டம்-தண்டாயுதத்தை
புணைந்த-தரித்திருக்கும்
கையானே-கையுடைய பெருமானே
பழனித்தலத்து-பழனிப்பதியின்
அண்ணல்-தலைவன் ஆவான்
எ-று. 17

சக்கர மாறுகள் தீர்சதுர் வேதன் சமரொழித்து
மைக்கர மாறுதல் எய்தவுண் டான்மகன், வாய்ந்தபெரும்
செக்கர மாறகி லான்வய லூரிற் றினமும்வசித்து
அக்கர மாறுமுரைப்பார்க்குண் டாம்பர மானந்தமே.

சக்கர-சக்கரப்படை பூண்ட
மால்-திருமாலும்
துகள்தீர்-குற்றமற்ற
சதுர்வேதன்-பிரமதேவனும்
சமர்-நானே கடவுளென்ற போரினை
ஒழித்து-தீர்த்து
மை-இருண்ட
கரம்-ஆலகால விடத்தை
மாறுதல் எய்த-அதன் தன்மைமாற
உண்டான்-அமுதாகப் புசித்த
மகன்-குமாரன் சிவனது
வாய்ந்த-திருமேனியிலமைந்த
பெரும்-மிகுதியான
செக்கர்அம்-செம்மையின் அழகு
மாறகிலான்-நீங்காதவன்
(அப்பெருமானுடைய)
வயலூரில்-பழனிப்பதியில்
தினமும் வசித்து-நாளும் இருந்து
அக்கரம்-மந்திர எழுத்து
ஆறும்-ஆறினையும்
உரைப்பார்க்கு-செப்பியவர்கட்கு
உண்டாம்-உண்டாகும்
பரம-மேலாகிய
ஆனந்தம்-பேரின்பம்
எ-று. ஏ-அசை. 18

கள்ளக் குறத்திரு வெண்ணீ றுடல்முற்றும் நன்கணியும்
வெள்ளக் குறத்தி யனையார் பலர்க்கும், வியந்துதொழப்
பள்ளக்கு றத்திய நீர்தோய் கழனிப் பழனிநகர்க்
கள்ளக் குறத்தி மணவாளன் போற்றெய்வம் காணரிதே.

*நல்-விரும்பத்தக்க*
*அக்கு-உருத்திராக்க மாலை*
*உற-பொருந்தப்பூண்டு*
*திருவெண்ணீறு-விபூதியை*
*உடல் முற்றும்-உடல் முழுவதும்*
*நன்கு அணியும் திருந்தப் பூசு*
*வெள்ள-மிகுதியுடன் கின்ற*
*குற-குட்டை வடிவில்*
*அத்தி-யானைபோன்றவலிமையும்*
*கொண்ட அகத்திய முனிவரை*
*அனையார்-ஒத்ததவசிகள்*
*பலர்க்கும்-அனைவருக்கும்*
*வியந்து-மேம்பாட்டுடன்*
*தொழ-வணங்குவதற்குரியதாம்*
*பள்ளக்கு-பள்ளத்தின்கண்*
*உறுத்திய-தேங்கியுள்ள*
*நீர்தோய்-நீர்வளமிக்க*
*கழனி-வயற்சிறப்புற்ற*
*பழனிநகர்-பழனிநகரில்*
*கள்ள-கபடநட்புடைய*
*குறத்தி-வள்ளிநாயகியின்*
*மணவாளன்போல்-கணவனை*
*முருகப்பெருமானைப்போல*
*தெய்வம்-வேறொரு கடவுள்*
*காண்பரிது-காணக்கிடையாது*
*எ-று. ஏ-அசை.* 19

வஞ்சரி பங்கனைத் தாங்கெதிர்த் தார்க்கில் வதைப்பவன்,பொன்
நெஞ்சரி பங்கனை வெய்தாது காப்பவன், நீள்கடப்ப
மஞ்சரி பங்க னையவய லூர்ப்புகழ் வாய்ந்தவன், வான்
குஞ்சரி பங்கனைங் கோல்மத னுணுறும் கோலத்தனே.

*வஞ்சர்-கபடமுடையவர்கள்*
*இபம்-யானையானது*
*கனைத்தாங்கு-பிளிறியதுபோல்*
*எதிர்த்து-எதிர்ப்பட்டு (சினந்து)*
*ஆர்க்கில்-ஆரவாரமுடன் போரிட்டால்*
*வதைப்பவன்-அவரை அழிப்பவன்*
*பொன்-இலக்குமி வசிக்கின்ற*
*நெஞ்சு-மார்புடைய*
*அரி-திருமால் (அசுரர்களின்)*
*பங்கப்-அச்சத்தால்*
*நைவு-மனச்சோர்வு*
*எய்தாது-அடையாதபடி*
*காப்பவன்-அருள்செய்பவன்*
*நீள்-நீளமான*
*கடப்பமஞ்சரி-கடம்பமலர்மாலை பூண்ட*
*பங்கன்-பாங்குடையவன்*
*ஐய-அழகுடைய*
*வயலூர்-பழனியூருள்ளவர்*
*புகழ்-பாராட்டிப்பேசும் சிறப்பு*
*வாய்ந்தவன்-உடைய கடவுள்*
*வான்-தேவர்கள் வளர்த்த*
*குஞ்சரி-தெய்வயானையம்மையை*
*பங்கன்-ஒரு பக்கத்திற்கொண்டவன்*
*ஐங்கோல்-ஐங்கணையுடைய*
*மதன்-மன்மதன்*
*நாணுறும்-நாணும்படியான*
*கோலத்தன்-அழகுடையவன்*
*எ-று. ஏ-அசை.* 20

திருக்கடம் பார மிடியாதி யாவன தீர்த்தென்னெஞ்சை
உருக்கடம் பாரங்கண் மானார் மயலும் ஒழித்தினிதாள்
பெருக்கடம் பாரத்த வேலா! பழனிப் பெருங்கிரிவாழ்
மருக்கடம் பார முருகா,தண் டேன்றும் வலக்கையனே.

திருக்கு-மாறுபட்ட குணம்
அடம்-பிடிவாதம்
பாரமிடி-பெரிய வறுமை
ஆதியாவன-முதலியவற்றை
தீர்த்து-இல்லாமற் போக்கி
என் நெஞ்சை-என் மனத்தை
உருக்கு-இளகச்செய்கின்றதாய்
அடு-போர்புரியும்
அம்புஆர்-அம்பை ஒத்த
அம்கண் அழகிய கண்ணுடைய
மானார்மயலும்-மாதரிச்சையையும்
ஒழித்து-அறச்செய்து
இனிதுஆள்-இனிதே ஆட்கொண்டருள்க
பெருக்கு-பெருமிதமான
அடம்பா-அழகிய ஆடம்பரமுடையவனே
ரத்த-இரத்தக்கறைபடிந்த
வேலா-வேலாயுதப் பெருமானே
பழனி-பழனிப்பதியில் உள்ள
பெருங்கிரி வாழ்-பெரிய மலையில் வாழும்
மரு-மணமிகுந்த
கடம்புஆர-கடப்பமாலை புனைந்தவனே
முருகா-முருகக் கடவுளே
தண்டு ஏன்றும்-தண்டாயுதம் பிடித்த
வலக்கையனே-வலக்கரமுடையவனே
எ-று. 21

மானக் குரவ மலர்மாலைத் தோளினன் மன்னுபல
தானக் குரவலி யுள்ளார் மருவுந் தனிவயலூர்க்
கோனக் குரவர வந்தீர்த்து வீடுங் கொடுக்கவல்ல
ஞானக் குரவ ரனை வோர்க்கும் மேல்நின்ற நாயகனே.

மான-சிறப்புமிக்க
குரவ-குரா என்ற
மலர்மாலை-மலரான மாலையுற்ற
தோளினன்-புயவரிசையுடையவன்
மன்னு-நிலைபெற்ற
பலதானக்கு-பல இடங்களுக்கு
உரவலி-மனவலிமை
உள்ளார்-உடையவர்கள்மட்டும்
மருவும்-செல்லத்தக்க
தனி-ஒப்பற்ற
வயலூர்-பழனியில் அவிரும்
கோன்-தலைமைப்பெருமான்
அக்கு-உருத்திராக்க மாலைபூண்ட
உரவர்-ஞானிகளது
அவம் தீர்த்து-துன்பத்தைப் போக்கி
வீடும்-பரமுத்தியையும்
கொடுக்கவல்ல-தரக்கூடிய
ஞானக்குரவர்-சொரூபசித்தர்கள்
அனைவோர்க்கும்-பலருக்கும்
மேல்-உயர்வாக
நின்ற-நிலவுதல்கொண்டுள்ள
நாயகன்-ஞானபண்டிதனாவான்
எ-று. ஏ-அசை.
தானக்கு-தானத்துக்கு, அத்து சாரியை கெட்டது 22

தீதாள மாலைய நிந்தைசெய் யேம்,அலர் செங்கமலப்
போதாள மாலையர் வின்றிக் கொண்டேம்,புறம் போகத்தள்ளேல்
பாதாள மாலையந் தீர்ப்பாய், பழனிப் பதிமுருகா
கூதாள மாலை யணிந்தாடு வாய்,தொண்டர் கூட்டத்தனே.

தீது-தீய செயல்களை
ஆளம்-கைக்கொள்ள மாட்டோம்
ஆலய-திருக்கோயில்களை
நிந்தை செய்யேம்-பழிக்க
அலர்-விரிந்துள்ள மாட்டோம்
செங்கமல-செந்தாமரை
போதாள்-பூவிலுள்ள திருமகளின்
அம்மால்-பொருளின் ஆசையை
அயர்வின்றி-அளவில்லாமல்
கொண்டேம்-பெற்றுள்ளேம்
புறம்-வெளியே அதனால்
போகத்தள்ளேல்-செல்லவிடக்
கூடாது

பாதாள-மிகவும் ஆழ்ந்துள்ள
மால் ஐயம்-பெரும் சந்தேகங்களை
தீர்ப்பாய்-அகற்றவேண்டும்
பழனிப்பதி-பழனிப்பதியின்
முருகா-முருகப்பெருமானே
கூதாளமாலை கூதாளப் பூமாலை
அணிந்து-மார்பில் தரித்து ஐய
ஆடுவாய்-மலையில் நடிப்பவனே
தொண்டர்-அடியவரது
கூட்டத்தனே-கூட்டமகலா
எ-று. தவனே

23

கச்சைய லங்கல் அணிமுகக் கோங்கையர் கைகள்இடும்
பிச்சைய லங்க லணித்தொலைத் துய்யப் பெறுவதென்றோ
சச்சைய லங்க லணிலோசை யாதிகொள் சாரல்மலர்ச்
செச்சைய லங்க லணி வாய் பழ னித் திகிரியனே.

கச்சு-மார்புக்கச்சு
ஐ அலங்கல்-அழகிய பொன்மாலை
அணி-அணிந்துள்ள
முக-எடுப்பான
கொங்கையர்-தனமுடைய மாத
கைகள்-கரங்களால் ரது
இடும்-தருகின்ற
பிச்சை-பிச்சையை வேண்டி
அலங்கல்-அலைகின்ற
அணி-வீட்டுவரிசைகளை
தொலைத்து-வெறுத்துவிட்டு
உய்ய-உன்னருளை நாடுவதை
பெறுவது-அடையும்நாள்
என்றோ-எக்காலம் வருமோ

சச்சு-அலகுடைய பறவைக்
கூட்டம்
ஐ அல்-அழகிய மரச்செறிவின
லான இருட்டு
அம்-கனிபூமுதலியவற்றின்அழகு
கல்-கல்லென ஒலிக்கும்
அணில் ஓசை-அணிலின் சத்தம்
ஆதிகொள்-முதலிய சிறப்புமிக்க
சாரல்-சோலைகளில்
மலர்-பூத்துள்ள
செச்சை-வெட்சிப்பூவாலான
அலங்கல்-மாலைகளை
அணிவாய்-தரித்திருப்பவனே
பழனி-பழனியூரில் விளங்கும்
திகிரியனே-மலைக்கிறைவனே 24

போதள சந்தனல் அன்னார் மனையிற் புகுங்கொடிதை
நீதள சந்தன கந்தீர்த்த வென்றி நிசப்படுங்காண்
மாதள சந்தனற் பாடற் பழனி வரோதய,செஞ்
சீதள சந்தன வெற்புடை யாற்கருள் செய்தவனே.

போதள்-பூமகளான திருமகள்
அசந்து-மறந்தவளாய்
அனல் அன்னார்-தீயொத்த கொடியரது
மனையில்-இல்லத்தில்
புகும்-சென்றிருக்கும்
கொடிதை-கொடிய செயலை
நீ தள்-நீ மாற்றவேண்டும்
அசம்தன்-ஆட்டுக்கடாவின்
அகம்-ஆணவத்தை
தீர்த்த-அகற்றிய
வென்றி-உன் வீரச்செயல்
நிசப்படும்-உண்மையாகும்
மா-மாட்சிமையுடன்
தள-விசாலமான நடையில்
சந்த-சந்தச் சிறப்புடனமைந்த
நற்பாடல்-உயர்ந்தபாடல்
பழனி-பழனித்தலத்தின் [பெற்ற
வரோதய-வரமான தெய்வமே
செம்-செம்மையான
சீதள-குளிர்ச்சியுள்ள
சந்தனவெற்பு-பொதிய மலைக்கு
உடையாற்கு-உரிய குறுமுனிக்கு
அருள் செய்தவனே-உபதேசித்த குருபரனே
எ-று. 25

பெருமாத ராய்த்துதி பாடும்புலவர் பெறவும் கைப்போன்
ஒருமாத ராரையும் யான்பொரு ளாமென உன்னவிடேல்
அருமாத ராதல நாரி கணவன் அறைபுகழ்தோய்ந்து
இருமாத ரார்கொண்க னாய் பழனியில் என்னப்பனே.

பெரும்-மிகுதியான அளவில்
ஆதராய்-உதவி வேண்டியவராய்
துதிபாடும்-தன்னைப்புகழ்ந்து பாடுகின்ற
புலவர்-கவிவாணர்கள்
பெறவும்-பெறும்படியும்கூட
கைப்போன்-கைப்பணத்தில்
ஒருமா-சிறிதளவும்
தராரையும்-தராதலோபியரை
யான்-அடியேன்
பொருளாமென-மதித்து
உன்ன-நினைத்துழலுமாறு
விடேல்-விடவேண்டாம்
அரும் மா-அரிய பெருமைபெற்ற
தராதலநாரி-பூமிதேவியின்
கணவன்-திருமால்
அறைபுகழ்-சொல்லும் கீர்த்தி
தோய்ந்து-பொருந்தப்பெற்று
இரு-வள்ளி தெய்வயானையென்ற
மாதரார்-இருவரது
கொண்கன்-கணவனாக
ஆனாய்-விளங்கும் பெருமானே
பழனியில்-பழனியில் விளங்கும்
என் அப்பனே-எனது தந்தையே
எ-று. 26

முன்னங் கருணைக் கிளிதான்என் றென்னை மொழிந்தநின்வாய்
பொன்னங் கருணையச் சித்தர்தம் மூடும் புகஉய்க்குமோ
இன்னங் கருணை யிரங்காத தோத்தும் இருப்பதென்னே
மன்னங் கருணையச் செய்பழ னிக்குன்றில் வாழ்குகனே.

முன்-முன்ஒருசமயம்
அங்கு-திருவுருமாமலையில்
அருணை திருவண்ணாமலையிலிருந்த
கிளிதான்-அருணகிரிநாதரான
என்று-என்பதாக கிளியே
என்னை-அடியேனை
மொழிந்த-சொல்லியருளிய
நின்வாய்-உனது திருவாயானது
பொன்-திருவைஒத்த அழகிய
அங்கர்-உடலுள்ளமாதர்களை
உன்னை-மனதிற்கொண்டு வருந்துகின்ற
அசித்தர்-அந்தஎன்னமுடையவர்
தம்மூடும்-தங்கள்கூட்டத்திலும்
புக-என்னைச்சேரும்படி
உய்க்குமோ-தள்ளிவிடுமோ
இன்னம் இதுவரையும்
கருணை-திருவுள்ளம்
இரங்காதது இரக்கமில்லாததை
ஒத்தும்-போலவும் இருப்பது
என்னே-என்னகாரணமோ
மன்-அரசனைப்போன்ற
அங்கர்-செல்வமுடையவர்
உன்-கருதும்
நய-வளம்பலவுள்ள
செய்-வயற்சிறப்பமைந்த
பழனிக்குன்றில்-பழனிமலையில்
வாழ்-வீற்றிருக்கின்ற
குகனே-முருகப்பெருமானே 27

கைப்போது முற்றச் சொரிந்திரந் தேத்துங் கனதொழும்பர்
செப்போது முற்றகைக் கொங்கைநல் லார்மயல் சேர்தல்நன்றே
மைப்போது முற்றலைச் சாரணர் கால, மலைப்பழனிக்(கு)
எப்போது முற்ற குகனே சரவணம் ஈன்றகன்றே.

கை-கைகளிடத்தே
போது-மலர்களை
முற்ற-நிறையக்கொண்டு
சொரிந்து-உன்பாதங்களிலிட்டு
இரந்து-அருளை வேண்டியாசித்து
ஏத்தும்-துதிக்கின்ற
கன-மேம்மாடுடைய
தொழும்பர்-தொண்டரானோர்.
செப்பு-செப்பினை
ஓதும்-இணை கூறத்தக்கபடி
முற்றகை-முற்பட்டுத்திகழும்
கொங்கைநல்லார்-தனமாதர்மீது
மயல்சேர்தல்-ஆசைகொள்வது
நன்றே-நலமாகுமா
மைப்போது-இராப்பொழுது
முற்றலை-முதிர்ந்ததுபோல்உள்ள கரியஉடலையுடைய
சாரணர்-சமணர்களது
கால-எமனுயுள்ளவனே.
மலைப்பழனிக்கு-பழனிமலைக்கு
எப்போதும்-எக்காலமும்
உற்ற-உரிமையுடனிருக்கின்ற
குகனே-குகக்கடவுளே
சரவணம்-சரவணப்பொய்கை
ஈன்ற-பெற்றுதவிய
கன்றே-குழந்தைப்பெருமானே
எ-று.

28

அங்கை யளித்த வனமாது கேள்வன், அறம்வளர்த்த
செங்கை யளித்தகை யாளான வேலன், திருப்பழனி
தங்கை யளித்தண் கடம்பார மார்பன், சரவணப்பூங்
கங்கை யளித்தவன், இந்திர கோடிக்கோர் காவலனே.

அம்கை-அழகியகையினை (தான்)
அளித்த-பற்றும்படிகொடுத்த
வனமாது-வேடமகளானவள்ளி
கேள்வன்-நாயகப்பெருமான்
அறம்வளர்த்த-தருமம் 32ம்செய்த
செம்-செம்மையான
கை-கையினையுடைய
அளி-கருணைநிரம்பிய
தையாள்-தாயான சத்தியினால்
ஆனவேலன்-ஆகியவேலாயுதன்
திரு-தெய்வீகமிக்க
பழனி-பழனியம்பதியில்
தங்கு-தங்கியிருக்கும்
ஐ-தலைமைக்கடவுள்
அளி-வண்டுமொய்க்கின்ற
தண்-குளிர்ந்த
கடம்பார-கடப்பமாலையணிந்த
மார்பன்-மார்புடையவன்
சரவணப்பூ-தாமரைப்பூவாவியில்
கங்கை-கங்கையால்வளர்த்து
அளித்தவன்-உதவப்பெற்றவன்
இந்திர கோடிக்கு-பல
ஓர்-ஒப்பற்ற இந்திரர்க்கு
காவலன்-முதற்றலைவனானவன்
எ-று ஏ-அசை. 29

வேற்பகப் பாதவன் வாழ்வுறப் பேயட்ட வேற்பெருமாள்
அற்பகப் பாதவன் சேரற மீன்மைந்தன் ஆழ்சிவத்தின்
பொற்பகப் பாதவர் போற்றாப் பழனிப் பொருப்பில் எந்தை
கற்பகப் பாதவம் ஐந்தினும் சீர்த்த கருணையனே

வெற்புஅக-மலைக்குகையுள்
பா-பரவலராயும்
தவன்-தவசியாயுமுள்ள நற்கீரர் அடைபட்டபோது
வாழ்வுற-வாழும்படி
பேய்அட்ட-பேயைக்கொன்ற
வேற்பெருமாள்-வேலாயுதக் கடவுள்
அல் இருட்டை
பகு-பிளந்து கொண்டு
அப்பு-கடல்நீரின்மேலேவரும்
ஆதபன்-பூரணச்சந்திரன்
சேர்-சேர்க்கையுள்ள
அறமீன்-கார்த்திகைமாதரது
மைந்தன்-புதல்வனாகவுள்ளவன்
ஆழ்சிவத்தின்-மேலான சிவத்தின்
பொற்ப-அழகுடையவன்
கப்பு-நிரம்பிய
ஆதவர்-குற்றமுடையவர்
போற்றா-வணங்கப்பெறாத
பழனி-பழனியில் உள்ள
பொருப்பில்-மலையில்விளங்கும்
எந்தை-எம்தந்தையானவன்
கற்பக-கேட்டவற்றைத்தருகின்ற
பாதவம்-மரங்கள்
ஐந்தினும் ஐந்தைவிட
சீர்த்த-மேலான
கருணையன்-கொடையுடையவன்
எ-று. ஏ-அசை. 30

அண்டங் கறுத்த அவுணேசர் கூற்றன், அலைகடல்சூழ்
மண்டங் கறுத்த மதத்தோர்க்குந் தேசிகன், மையலைமெய்
விண்டங் கறுத்தருள் வான்பழ னுபுரி மேயபிரான்
கண்டங் கறுத்தவன் செய்தவப்பேறெனல் கட்டுரையே

அண்டம்-பலஅண்டங்களை
ஆண்டு
கறுத்த-பகைத்துப்போர்செய்த
அவுணேசர்-தாரகன் முதலிய
மூவரை
கூற்றன்-அழித்தஎமனானவன்
அலைகடல்சூழ்-சமுத்திரஞ்சுற்றிய
மண்-இப்பூவுலகத்தில்
தங்கு-நிலைபெற்றுள்ள
அறுத்த-ஆறுவகைப்பட்ட
மதத்தோர்க்கும்-சமயிகட்கும்
தேசிகன்-குருநாதனாயுள்ளவன்
மையலை-உலகஆசையானமயலை
மெய்-உண்மையானஅருளுப
தேசம்
விண்டு-கூறி
அங்கு-அவரிடமிருந்தமயக்கத்தை
அறுத்து-அகற்றி
அருள்வான்-ஆட்கொள்பவன்
பழனுபுரி-பழனிப்பதியில்
மேய-விளங்குகின்ற
பிரான்-பெருமான்
கண்டம்-கழுத்து
கறுத்தவன்-விடமுண்டுகறுப்
செய்-செய்த பானசிவன்
தவப்பேறு-தவப்பயனானவன்
எனல்-என்றுகூறுவது
கட்டுரை-புனைந்துரையேயாம்
ஏ-று. ஏ அசை. 31

பாங்கேய னுமுரு காநொந்து பட்டபுண் பாடறிந்தும்
ஈங்கேய னுமுரு காட்டுகின் றுயிலை எங்ஙன்உய்வோம்
தீங்கேய னுமுரு கார்சூழ் பழனிச் சிலம்பில்வளர்
காங்கேய னுமுரு காஇனி வேணும் கடைக்கணியே.

பாங்கு-இணக்கமாக
ஏய-உம்மிடம் வந்துள்ள
நாம்-யாம்
உருகா-மனம்நெகிழும்படி, உமது
நொந்து-காட்சிகாண வருந்தி
பட்ட-அநுபவித்த
புண்பாடு-துன்பங்களையெல்லாம்
அறிந்தும்-தெரிந்திருந்துங்கூட
ஈங்கு-இவ்விடத்தில்
ஏயனும்-இசைந்தவனுகி
உரு-உன் திருவுருவக் காட்சியை
காட்டுகின்றுயிலை-காணத்தர
எங்ஙன்-எந்தவகையில் வில்லை
உய்வேம்-ஆன்மஈடேற்றம்
பெறுவேம்
தீம்-இனிமையான
கேய-பாடல்களையுடையவனே
நாம்-அச்சத்தைத்தர
உறு-உடையதான
கார்-கரியமேகங்கள்
சூழ்-சூழப்பெற்ற
பழனிச் சிலம்பில்-பழனிமலையில்
வளர்-வீற்றிருக்கின்ற
காங்கேயனும்-கங்கைமகனை
முருகா-முருகப்பெருமானே
இனிவேணும்-இனிமேலாவது
உம் தொசனம் தந்து
கடைக்கணி-கடைக்கண் பார்க்க
வேணும்
ஏ-று. ஏ-அசை. 32

பொன்னலங் கைய னையச் செகுத் தாலும் புகழ்முருகோன்
மன்னலங் கைய னையர்க்கெளி யான்கும்ப மாமுனிதேர்
சின்னலங் கைய னையவய லூரன் சிறிதிரங்கிற்
கன்னலங் கையனை யன்கூற் றஞ்சுந்திறல் கைவருமே.

பொன்ன-பொன்மயமான (அழகிய)
லங்கையன்-இராவணன்
கைய-வருந்தும்படி
செகுத்தாலும்-கொன்ற திருமா [லும்
புகழ்-சிறப்பித்துக்கூறும்
முருகோன்-முருகக்கடவுள்
மன்-பொருந்திய
அல்-கருமைநிறமான
அம்-மேகத்தைப்போல் உதவு கின்ற
கை-கையுடைய கொடையாளர்
அனையார்க்கு-ஒத்தவர்கட்கு
எளியான்-சுலபமாகஅருள்பவன்
கும்பமாமுனி-அகத்தியர்
தேர்-தெரிந்துகொண்ட
சின்-சின்முத்திரையின்
நலம்-நலமான அருளைக் காட்டு [கின்ற
கையன்-திருக்கரமுடையவன்
நய-நன்மை மிக்க
வயலூரன்-பழனிப்பதிக்கிறை
சிறிது-கொஞ்சம்
இரங்கில்-திருவுளமிரைந்தால்
கன்னல்-கரும்பை வில்லாயேந்திய
அம்மையன்-அழகிய கையனை
அயன்-பிரமன் மன்மதன்
கூற்று-எமன்
அஞ்சும்-இவர்கள் அச்சமுறத்தக்க
திறம்-தவவலிமை
கைவரும்-எனக்கெய்தும்
எ-று. ஏ-அசை. 33

துண்டப் படாமணி கொங்கைநல் லார்மயற் சூழ்வகற்றிக்
கண்டப் படாமணி போலுமெய் ஞானக் களிப்பருளில்
அண்டப் படாமணில் யான்பிற வேன்இன்னம் அல்லல்வசை
உண்டப் படாம ணியவய லூர்க்குன்றில் உற்றவனே.

துண்ட-துண்டாகஅறுக்கப்பட்ட
படாம்-சேலைமுன் றனையால்
அணி-அணியப் பெற்ற
கொங்கைநல்லார்-மாதர்களது
மயல்-ஆசையானது (மனதில்)
சூழ்வு அகற்றி-சூழ்ந்திருப்பதை மாற்றி
கண்டப்படா-பிளவுபடாத
மணிபோலும்-மணியைஒத்த
மெய்ஞான-உண்மை ஞானத்தின்
களிப்பு-பேரானந்த மகிழ்வை
அருளில்-நான்பெறக்கொடுத் தால்
அண்டு-அடுத்த பிறப்பாக
அப்படா-அப்பாடா என்னும்படி
மணில்-இவ்வுலகில் மீண்டும்
யான்பிறவேன்-நான் பிறப்படை
இன்னம்-இனிமேலும் யேன்
அல்லல்-துன்பம் தருவதான
வசையுண்-பழிகளை நுகரும்
தப்பு-தவறுகள்
அடா-என்னைச்சேராது
மணிய-மாணிக்கம்போற் சிறந்த
வயலூர்-பழனியம்பதியில் உள்ள
குன்றில்-மலைக்கோயிலில்
உற்றவனே-இருப்பவனே
எ-று. 34

**பாரணைங் கண்ட ரோடுவாடல் ஓர்ந்துட் பதைபதைக்கும்**
**சூரணைங் கண்டலர் வாழ்வோ டழியத் தொலைத்தெனை ஆள்**
**வாரணங் கண்டமைக் குந்தோகை யோடுகோள் வானவநால்**
**ஆரணங் கண்ட முருகா பழனிக் கழகியனே.**

*பார்அணங்கு-நிலமகள்*
*அண்டரொடு-தேவர்களுடன்*
*வாடல்-வருந்துவதை*
*ஓர்ந்து-அறிந்து*
*உள்-என் மனதில்*
*பதைபதைக்கும்-மிகத் துயரம் தருகின்ற*
*சூர்-அச்சத்தால்*
*அணங்கு-வாடுகின்றேன் (ஆதலால்)*
*அண்டலர்-கொலைப்பாதகரது*
*வாழ்வோடு-இன்ப வாழ்வானது*
*அழிய-நிலமகள்துயரமும்நீங்கும் படி*
*தொலைத்து-அடியோடு போக்கி*
*எனை-அடியேனை*
*ஆள்-ஆண்டருள வேண்டும்*
*வாரணம்-கொடியான சேவலை*
*கண்தமைக்கும் கண்மிகக் கொண்ட*
*தோகையோடு-மயிலுடன்*
*கோள்-வாகனமாயேற்ற*
*வானவ-பெருமானே*
*நால்-நான்குவகைப்பட்ட*
*ஆரணம்-வேதங்கள்*
*கண்ட-போற்றும்படியான*
*முருகா-முருகக்கடவுளே*
*பழனிக்கு-பழனிப்பதிக்கேற்ற*
*அழகியனே-அழகுத்தெய்வமே*
*எ-று.* 35

**நற்புத வான வரசவி னோதம் நயந்தருளிப்**
**பொற்புத வானவக் கொங்கையர்க் கேங்கும் புரைஒழித்தாள்**
**கற்புத வானவன் பாலா/நற் கீரன்முன் கண்டுமகிழ்**
**அற்புத வானவ னேபழ னுபுரி யாதிபனே.**

*நல்-நலமிக்க*
*புத-அறிவுடைவானவனே*
*வால்-பெருமைக்குரிய*
*நவரச-ஒன்பான் சுவையின்*
*விநோதப்-விளையாடலை*
*நயந்து-யான் புரியும்படி*
*அருளி-கொடுத்துதவி*
*பொற்பு-அழகு*
*தவா-நீங்காமல்*
*நவ-புதுமைப்பொலிவுடைய*
*கொங்கையர்க்கு-மாதர்களைக் கண்டு*
*ஏங்கும்-அடையவிரும்புகின்ற*
*புரை-குற்றச்செயலை*
*ஒழித்துஆள்-நீக்கியருள*
*கற்பு-நீதிமுறைகள் வேண்டும்*
*உதவு-உலகில்நடக்கஆணையிட்ட*
*ஆனவன்-இடபக்கொடிச்சிவன்*
*பாலா-குமாரனே*
*நற்கீரன்-நற்கீரதேவர்*
*முன்கண்டு-கண்முன் பார்த்து*
*மகிழ்-மகிழக்காட்சி தந்த*
*அற்புத அதிசய ஆடல்செய்த*
*வானவனே-தெய்வமே*
*பழனுபுரி-பழனிப்பதிக்கு*
*ஆதிபனே-தலைவனாயிருப்பவனே.*
*எ-று.* 36

தம்ப மனையவள் சொல்லையென் றெண்ணும் சழக்கரையும்
நம்ப மனையருள் வேலோடு தோன்றி நலமருள்வாய்
பம்ப மனையன்பர் கூட்டங் குலாவும் பழனிவெற்பிற்
கும்ப மனைய முலையார் நடஞ்செய்பொற் கோயில்மன்னே.

தம்பம்-தூண்போல(லட்சிய மானது)
மனையவள்-மனைவியின்
சொல்லை-சொற்களையாகும்
என்றெண்ணும்-எனக்கருதும்
சழக்கரையும்-காமிகளையும்
நம்பம்-நம்பமாட்டேன்
அனை-தாயான உமையவள்
அருள்-உதவிய
வேலோடு-வேலேந்தியபடி
தோன்றி காட்சி தந்து
நலம்-திருவருட்பேற்றை
அருள்வாய்-கொடுத்தருள வேண்டும்
பம்ப-மிகுதியான ஆரவாரங்கள்
மன்-பொருந்தும்படி
ஐ-தலைமையான
அன்பர்-அடியவர்களின்
கூட்டம் திருக்கூட்டம்
குலாவும்-விளங்குகின்ற
பழனிவெற்பில்-பழனிமலையில்
கும்பம் அனைய-குடத்தை ஒத்த
முலையார்-தனங்களுடைய மாதர்கள்
நடம்செய்-நடனம் செய்வதான
பொற்கோயில்-அழகிய திருக் கோயிலின்
மன்னே-தலைமைக்கடவுளே. 37

பொன்றாத வாணவச் சூர்மாய வென்ற புகழ்ச்சி மெய்யேல்
நின்றாத வாணவ வீரரோ(டு) யானும் நிலவச் செய்வாய்
மென்றாத வாணவச் செங்கடம் பார! வியன்பழனிக்
குன்றாத வாணவத் தோரோடு கூட்டிக் குழப்பிடலே.

பொன்றாத-அழிதலற்ற
ஆணவ-ஆணவமலத்தின் கூறான
சூர்-சூரமன்மனான அசுரன்
மாய-அழியும்படி செய்து
வென்ற-வெற்றி பெற்ற
புகழ்ச்சி-சிறப்பானது
மெய்யேல்-உண்மையானால்
நின்-உன்னுடைய
தாத-தொண்டராகி
வாள்-வாள் வீரரான
நவ வீரரோடு-ஒன்பதின்மருடன்
யானும்-என்னையும் ஒருவனாக
நிலவச்செய்வாய்-அமைப்புரிக
மென்-மென்மையான
தாத-மகரந்தமுடன்
வாள்-விளக்கமும்
நவ-புதியதுமான
செங்கடம்பார-செங்கடம்பமாலையானே
வியன்-அலங்காரமான
பழனிக்குன்று-பழனிமலைப் பரனே
தவு-கீழ்மையான
ஆண்-ஆண்மை (தலைமை)புடைய
அவத்தோரோடு-மூடரோடு
கூட்டி-சேரச்செய்து
குழப்பிடல்-மனங்கலக்க வேண்டாம்
ஏ-று. ஏ-அசை. 38

இத்தரை யாளைய ராதளிகூரும் இதங் கருதும்
பத்தரை யாளைய னூர்சென்னி யானென்சொற் பாழ்படுத்தேல்
கத்தரை யாளைய ணைந்தாய் பழனியிற் கந்த எண்ணில்
சித்தரை யாளைய னேஅதை நம்பித் தியங்கினனே.

இ-இந்த
தரையாள்-நிலமகள்
அயராது-பாவிகள்சுமையால் வாடாமல்
அளிகூரும்-நல்லோரால் இன்
இதம்-நலமானதை [புறும்
கருதும்-செய்யஎண்ணுகின்ற
பத்தரை-அன்பர்களை
ஆள்-ஆட்கொள்ளவேண்டும்
அயன் நூல்-பிரமனது வேதத்தின்
சென்னியான்-முடியாயுள்ளவன்
என்-என்றுஉன்னைக்கூறுகின்ற
சொல்-ஆன்றோர்மொழியை
பாழ்படுத்தேல்-வீணாக்காதே
க-செல்வம்தரும்
தரு-கற்பகத்தருவினளான
ஐயாளை-தெய்வானையை
அணைந்தாய்-மணம்பூண்டவனே
பழனியில்-பழனியில்உள்ள
கந்த-கந்தக்கடவுளே
எண்ணில்-அளவுபடாத
சித்தரை-சித்தர்களை
ஆள்-ஆட்சிசெலுத்தும்
ஐயனே-தலைவனே
அதைநம்பி-மறைச் சென்னியான் என்றசொல்லைநம்பி
தியங்கினன்-வருந்திக்கொண் டிருக்கின்றேன்
எ-று. ஏ-அசை 39

தவலான லன்னசொற் பேதங் குறித்திடுஞ் சண்டைவம்பர்
நவலா னலமர மேயென்னும் ஆர்வமும் நண்ணுவரோ
குவலா னலங்கலு றுப்போதுச் சீர்நிலை கோண்டுவம்பிற்
கவலா னலந்தரு வாய்பழ னுபுரிக் காதலனே.

தவல்-தவல் எனவும்
ஆனல்-ஆனல் எனவும்
அன்ன-அதுபோன்று ஒருபொரு
சொல்-வரும்சொற்களின் [ளில்
பேதம்-வேறுபாட்டையே
குறித்திடும்-குறிக்கொண்டு
சண்டை-(பொருளொன்றென் றறியாமல்) வாதுசெய்கின்ற
வம்பர்-வீணர்கள்
நவல்-நாவலும்
ஆல்-ஆலும்ஆகியவை
நல்மரமே-நல்லமரம்
என்னும்-என்றுஒப்பும்
ஆர்வமும்-பொதுவுணர்வை
நண்ணுவரோ-அடைவார்களா (மாட்டார்என்றபடி)
கு-உலகமாகிய
அ(ல்)லால்-அஞ்ஞானஇருளால்
அலங்கல்-கலங்குதலை
உறு-பொருந்தாத
பொதுச்சீர்-சமரசத்தின்
நிலை-உண்மைஅநுபவத்தை
கொண்டு-கைக்கொண்டு,
வம்பில்-மதவாதத்தில்
கவலா-மயக்கமடையாத
நலம்-நன்மையை
தருவாய்-கொடுத்தருளவேண்டும்
பழனுபுரி-பழனித்தலத்தின்
காவலனே-தலைமைக்கடவுளே
எ-று. 40

பொன்னம் பரதவி யாபகஞ் சேர்விலைப் பூவையர் பொய்ச்
சொன்னம் பரதவி யாபாரத் தோரைத் துதிக்கச்செல்லேன்
நன்னம் பரதவி யாபழ னுபுரி நாயக! யான்
இன்னம் பரதவி யாதளி கூர்நிலை யீந்தருளே.

பொன்-திருமகளின்
அம்-அழகும்
பரத-நாட்டியக்கலையில்
வியாபகம்-விரிந்தபயிற்சியை
சேர்-சேரப்பெற்ற
விலைப்பூவையர்-விலைமகளிரது
பொய்ச்சொல்-கபடமொழியை
நம்பர்-நம்புகின்றவரையும்
ரத-இனியசுவைப்பாடலை
வியாபாரத்தோரை-விற்பவரை
துதிக்க-பாராட்டிப்பேச [யும்
செல்லேன்-போகமாட்டேன்
நன்-நன்மையான
அம்பர-ஆகாயமானவெளியின
வே
தவியா-இணையாதவளமிக்க
பழனுபுரி-பழனியம்பதியின்
நாயக-தலைவனே
யான்-அடியேன்
இன்னம்-இனிமேலும்
பரதவியாது-தளர்வடையாமல்
அளிகூர்நிலை-மகிழும்தகுதியை
ஈந்தருள்-கொடுத்தருளவேண்டும்
ஏ-று ஏ-அசை. 41

கடங்கா மனத்தைக்கண் டேங்கப் பழனிக் கனசிலம்பி
னிடங்கா மனத்தைய னாகிநின் றாய்! அறம் யாவுஞ்சற்றும்
நடங்கா மனத்தை யெனகாப்ப வேமிக நோற்பதனுக்(கு)
அடங்கா மனத்தை யடக்குந் திறமை அளித்தருளே.

கடம்-காடுபோற்படர்ந்துள்ள
கா-கற்பகத்தருவின்
மன்-அரசனான இந்திரன்
அத்தை-திருமகள்
கண்டு-கண்ணுற்பார்த்து
ஏங்க-ஆரவாரமாகப் புகழும்படி
பழனி-பழனிப்பதியின்
கனசிலம்பின்-மேலானமலையின்
இடம்-சிகரத்தின்கண்
காமன்-மன்மதன்
நத்து-விரும்பும்படி
ஐயனாகி-அழகுடையவனாக
நின்றாய்-நிலைத்திருப்பவனே
அறம்யாவும்-அறமெல்லாமும்
சற்றும்-ஒருசிறிதளவும்
நுடங்காமல்-மாறுபடாதபடி
நத்து-சங்கினைத்தரித்த
ஐயனை-தலைவனைப்போல
காப்பவே-உலகிற்காக்கும்படி
மிக-மிகவும் அன்போடு
நோற்பதனுக்கு-தவம்புரிவதற்கு
அடங்கா-ஒருநிலையில்நிற்காத
மனத்தை-என்மனதை
அடக்கும்-புலன்வழிபோகாமல்
நிறுத்தும்
திறமை-தவவலிமையை
அளித்தருள்-கொடுத்தான
வேண்டும்
ஏ-று. ஏ-அசை. 42

**கஞ்சனக் கண்ணிரங் கப்புடைத் தாண்ட கனங்கருதேன்**
**னெஞ்சனக் கண்ணியிற் பட்டுழ லாவண்ணம் நீபுரப்பாய்**
**வெஞ்சனக் கண்ணிய னல்லாய் பழனி விசாக ! விண்ணோர்**
**அஞ்சனக் கண்ணி மணாளா மலைமுற் றளிப்பவனே.**

*கஞ்சன்-பிரமனுடைய*
*அ-எட்டான (தமிழ் எண்முறையில்)*
*கண் இரங்க-கண்களில் நீர்பெருக*
*புடைத்து-சிரசிற்குட்டி*
*ஆண்ட -அகந்தைதீர அருளிய*
*கனம்-கருணைப்பண்பை*
*கருது-எண்ணியின்புறுகின்ற*
*என் நெஞ்சு-எனது மனம்*
*அன-அன்னம்போன்றமாதரது*
*கண்ணியில்-மோகவலையில்*
*பட்டு-சிக்கி*
*அயராவண்ணம்-துன்புறுதவாறு*
*நீபுரப்பாய்-என்னைக்காக்கவேண்டும்*
*வெம்-விரும்புகின்ற*
*சனக்கு-சனத்துக்கு (அன்பர்கட்கு)*
*அன் பொருத்தமாக*
*இயல்-அமைகின்ற*
*நல்லாய்-நன்மைதருபவனே*
*பழனி-பழனிப்பதிக்குரிய*
*விசாக-விசாகப்பெருமானே*
*விண்ணோர்-தேவர்கள்வளர்த்த*
*அஞ்சன-மைதீட்டிய*
*கண்ணி-கண்ணுடையதெய்வ [யானை*
*மணாளா-கணவனே*
*மலைமுற்று-எல்லாமலைக் கோயிலையும்*
*அளிப்பவனே-காவல்புரியும் தெய்வமே* 43

**முத்தியங் கைய நகையார் முலைப்பெரு மோகமிஞ்சிப்**
**பத்தியங் கையந் தரநொந்து ளேனைக்கண் பார்த்தருள்வாய்**
**சித்தியங் கையக லாப்பழ் னுபுரிச் செல்வ திகழ்**
**சத்தியங் கையர சேஇன்னம் இன்னல் சகிப்பரிதே.**

*முத்து-வெண்முத்தினைப்போல்*
*இயங்கு-ஒளிசெய்கின்ற*
*ஐய-அழகுடைய*
*நகையார்-பற்களையுடையமாதர்களின்*
*முலைப்பெருமோகம்-தனத்தில் மீதுபேராசை*
*மிஞ்சி-அதிகப்பட்டதால்*
*பத்தி-பத்திசெய்கின்ற*
*அங்கு-அவ்விடத்தில் (மனதில்)*
*ஐயம் தர-சந்தேகம் ஏற்பட*
*நொந்துளேனை-வருந்துமென்னை*
*கண்பார்த்து-கடைக் கண்நோக்கி*
*அருள்வாய்-காப்பதுவேண்டும்*
*சித்தியம்-சிவயாக பூசலை*
*கையகலா-விழாநீங்காத*
*பழனுபுரி-பழனிப்பதியின்*
*செல்வ-செல்வமாயுள்ளவனே*
*திகழ்-விளக்கமாக*
*சத்தி-ஞானசத்திவேல் விளங்கும்*
*அம்கை-அழகியகையுடைய*
*அரசே-முதல்வனே*
*இன்னம்-இனிமேலும்*
*இன்னல்-மனவேதனை*
*சகிப்பரிது-தாங்கற்கரியது*
*ஏ-று. ஏ-அசை.*

44

**பண்டாள ரஞ்சகத் துய்ந்தமை நாடிப் பதைக்கு மென்னைக்**
**கொண்டாள ரஞ்சலிக் குங்கண்மின் னார்முற் குலையவிடேல்**
**எண்டாள ரஞ்சலிக் கேற்றாய் பழனிக் கிறைவ எண்ணில்**
**சண்டாள ரஞ்சப் பொருதார்க்கும் வீரர் சகாயத்தனே.**

பண்டு-முற்காலத்தில்
ஆளர்-தொண்டராயுள்ளபலர்
அம்சகத்து-அழகியஉலகில்
உய்ந்தமை-அருள்பெற்ற மாண்பை
நாடி-விரும்பி
பதைக்கும்-அவ்வருளைப்பெறத் தவிக்கின்ற
என்னை-அடியேனை
கொண்டு-கைக்கொண்டேற்று
ஆள்-ஆட்கொள்ளவேண்டும்
அரம்-அரமென்ற கருவியும்
சலிக்கும்-சலிப்படைகின்ற
கண்-கண்வீச்சுடைய
மின்னார்முன்-மாதர்முன்பு
குலைய-தவம்கெடும்படி
விடேல்-என்னைவிடவேண்டாம்
எண்தாளர்-எட்டுக்கால்களுடைய சரபவடிவம்கொண்ட சிவ பெருமானது
அஞ்சலி-வணக்கத்தை
ஏற்றாய்-விரும்பிஏற்றவனே
பழனிக்கு-பழனித்தலத்துக்கு
இறைவ-தலைவனே
எண்இல்-கணக்கற்ற
சண்டாளர்-பெரும்பாவிகளாவார்
அஞ்ச-பயம்அடையும்படி
பொருது-போர்செய்து
ஆர்க்கும்-வீரமுழக்கம்புரியும்
வீரர்-தீரமுடையவர்களின்
சகாயத்தனே-உதவியாயிருப்பவனே
எ-று. 45

**மும்மலத் தனைவரும் நொந்துள பாரில்மெய் முத்திநத்தித்**
**தும்மலத் தனைதுய ரும்கல வாச்சுகம் தோயச்செய்வாய**
**அமலத் தனையர் மலிவய லூரா! அருட்குறித்துக்**
**கமலத் தனைப்புடைத் தாய்பத்தி சோதனை காட்டல்விட்டே.**

மும்மலத்து-ஆணவமாகியமூன்று மலத்தொடர்புடைய
அனைவரும்-எல்லோரும்
நொந்துள-வருத்தமுற்றுள்ள
பாரில்-இவ்வுலகத்தில்
மெய்முத்தி-உண்மையான வீடு பேற்றை
நத்தி-பெறவிரும்பினேன்
தும்மல்-தும்முகின்றபோதுள்ள
அத்தனை-சிறிதளவில்
துயரும்-வரும்துயரமும்
கலவா-சேராதிருக்கும்
சுகம்-இன்பவாழ்வை
தோயச்செய்வாய்-அமையத் தருவாயாக
அமலத்து-மலமற்ற சிவனை
அனையர்-ஒத்ததவசிகள்
மலி-நிறைந்துள்ள
வயலூர-பழனிமலைத் தெய்வமே
அருள்குறித்து-அருள்வதைக் கருதி
கமலத்தனை-பிரமனை
புடைத்தாய்-குட்டிச் சிறையிட்டாய் அதுபோல
பத்திசோதனை-என்அன்பைப் பரிசீலனை செய்வதை
காட்டல்-செய்யாமல்
விட்டு-விடுவிப்பாயாக. 46

கைச்சிலை யிட்டம ராடும் புளினர் கவின் குறிஞ்சிக்
குச்சிலை யிட்ட படவாளைக் கெஞ்சினன், கோன்பழனித்
துச்சிலை யிட்டளம் தீர்த்தருள் என் றேத்தித் துணரோடுபல்
பச்சிலை யிட்டவ ரைத்துய்த்த ளான்றரு பாலகனே.

கை-கையிற்கொண்ட
சிலை-வில்லினிடம்
இட்டு-அம்பைப்பூட்டி
அமராடும்-போர்புரிகின்ற
புளினர்-வேடர்கள்
கவின்-வாழ்கின்ற
குறிஞ்சி-மலைநிலத்தில் உள்ள
குச்சில்-சிறுவீட்டில்
ஐ-அழகுடன்
இட்ட-மகிழ்வுடனிருந்த
படவாளை-வள்ளிநாயகியின்
கெஞ்சினன்-அன்பைவேண்டிய
கோன்-அழகினதா [வன்
பழனி-பழனிப்பதியை
துச்சில் ஐய-உறைவிடாக உடைய தலைவன்
இட்டளம்-துன்பங்களை
தீர்த்து ஆள்-நீக்கியருள்
என்று-என்பதாக
ஏத்தி-போற்றிசெய்து
துணரோடு-பூங்கொத்துடன்
பல்பச்சிலை-பலவிதமான பச்சிலைகளை
இட்டவரை-அருச்சித்த அன்பர்களை
துய்த்தளான்-தன்னுட் கொண்ட சிவபிரான்
தரு-தந்தருளிய
பாலகன்-குமாரக் கடவுள்
ஏ-று. ஏ-அசை. 47

பெருகக் கடவு ணேயம் பெறவும், பிறங்கறங்கள்
தருகக் கடவு ணேமாண் புறவும், தழைதிணைமா
விருகக் கடவு ணேப்பேதை கொங்கை விழைபழனி
முருகக் கடவு ணேயென் றுநாளும் மொழிதல்நன்றே. 48

நங்கும மேனிய மித்திட லார்தமிழ் நல்கிலதா
வெங்கும மேனிய மந்தந்த தார்மெய் விளம்புதியா
பொங்கும மேனியத் தோர்சூழ் பழனிப் பொருப்பில்வளர்
குங்குமமேனியப் பா/தண்டும் வேலும் கொளும்கையனே. 49

சிங்கவ ராகி யருள்வேட்டு ளாரெனச் சீரழிதா
பங்கவ ராகியல் சோமனிற் செய்தது பார்த்திரங் காய்
துங்கவ ராகி யணியாவி னன் குடித் தொண்டுசெய்யும்
புங்கவ ராகி யவர்சிறை யிட்டருள் புண்ணியனே. 50

நித்தருக் கான படியாடு மையனை நீகேன்றமேத்
தித்தருக் கான படியாடு மையார்ச் சேறக்கும்வண்மை
தத்தருக் கான படியாடு மைய! தடமுதல
பத்தருக் கான படியாடு மையன் பழனியவே. 51

திருவந்தாதி உரையுடன் முற்றிற்று

பழனித் திருவாயிரநூல் நிறைவுற்றது.

---

## நூற்பயன் சந்தக்கவி

*தனனத்தன தானன தானன தனதான*

[1]பொது நிச்சய மேயினி தாமெனும் நிலைதோய்வார்
[2]புனிதக்கவு மாரகு லாதியர்—எனவாழ்வார்
[3]கதுமைக்கதிர் வேல்மயில் சேவலொ(டு) உறவாவார்
[4]கருணைப் பகை யாவவர் தீயர்தம்—எமனோர்வார்
[5]விதுவுற்றச டாடவி யாருணர்—பொருளோர்வார்
[6]வினைகெட்(டு) உட லோடுமெய் விடுறு—புகழோர்வார்
[7]பதுமப்பிர மாஇரு தாளுகை—தொடமீளார்
பழனித்திரு வாயிரநூலிடை—பயில் வோரே

*1. சமரசஞானம். 2. சமயங்கள் எல்லாவற்றையும் தழுவும் சமரச நிலை 3. கூரியவேல் 4. கருணைப்பகை கொலைபுலை 5. இளம்பிறைச் சந்திரனையணிந்த சடைக்கற்றை 6. எடுத்த இவ்வுடலுடனேயே வீடு பேறுபெறுதல். 7. பிறவிக்காகப் பிரமன் கைகள் உடல் தரும் செயலற்று விடுதல்.*

தெய்வமே துணை

பதினைந்தாவது

# யமக அந்தாதி-பாட்டும் பொருளும்

விகடவி நாயக கவியாற் பழனியில் மேயவென்றி
விகடவி நாயகச் செவ்வேட்கந் தாதி விளம்பவெம்பா
விகடவி நாயகம் வேண்டாமல் அங்குள்ள வெற்படிவாழ்
விகடவி நாயகன் பாதங்கள் போற்றி விரும்புதுமே.

இதன் பதப்பொருள்.

*வி-அறிவை*
*கடவி-செலுத்தி*
*நாய-முதன்மையான*
*கவியால்-பாடற்சிறப்புற்ற*
*பழனியில்-பழனித்தலத்தில்*
*மேய-எழுந்தருளியுள்ளவரும்*
*வென்றி-வீரமிக்கவரும்*
*விகட-பெருமையுள்ள*
*வில்-ஒளிமிக்க*
*நாயக-தலைவருமாகிய*
*செவ்வேட்கு-முருகப்பெருமானுக்கு*
*அந்தாதி-முடிவைமுதலாகவுள்ள துதியை*
*விளம்ப-பாடுதற்கு*
*வெம்-கொடுமை மிக்க*
*பாவிகள்-பாவமுடையவராகி (நல்லோர்களை)*
*தவி-தவிக்கச்செய்கின்ற*
*நாய்-நாய்போன்று இழிந்த*
*அகம்-உள்ளத்தினர் துணையை*
*வேண்டாமல்-விரும்பாமல்*
*அங்குள்ள-பழனியிடமுள்ள*
*வெற்படி-மலையடிவாரத்தில்*
*வாழ்-கோயில்கொண்டுள்ள*
*விகடவிநாயகன்-கணநாதரது*
*பாதங்கள்-திருவடிகளை*
*போற்றி-வணங்கி, துணையாக*
*விரும்புதும்-ஆவல்கொண்டேன்*
*என்றவாறு. ஏ-அசை.*

## நூல்

திருப்பழ னிக்குகப் பான்வெட்கு பேரெழிற் சேய்தினம
திருப்பழ னிகது கனமார்செவ் வேள்பல சித்தர்தொழும்
திருப்பழ னிக்குகன் யான்வேட்ட பேறருள் செய்யில்வினைத்
திருப்பழ னிக்கு கலரோன்செய் தீமையுந் தீர்தருமே.

*திரு-தெய்வீகமான*
*பழன்-கனிபோன்றவன்*
*இக்கு-கரும்புவில்லை*
*உகப்பான்-விரும்புகின்ற மன்மதன்*
*வெட்கு-நாணமடையத்தக்க*
*பேரெழில்-பெரிய அழகுடைய*
*சேய்-முருகப்பெருமான்*
*தின்-அரித்து உண்கின்ற*
*நமது-நம்முடைய முற்பிறப்பின்*
*இருப்பு-சஞ்சிதவினையாகிய*
*அழல்-நெருப்பினை*
*நீக்கு-நீக்ரகிக்கும் (அழிக்கும்)*
*கனம்ஆர்-மாண்புமிக்க*
*செவ்வேள்-செவ்வேட்பரமன்*
*பலசித்கர்-பலசித்தர் கூட்டம்*
*தொழும்-நாளும் வழிபடுகின்ற.*
*திருப்பழனி-அழகிய பழனியம் பதியில் உள்ள*
*குகன்-குகக்கடவுள்*
*யான்வேட்ட-நான் பெற விரும்புகின்ற*
*பேறு-திருவருட்செல்வத்தை*
*அருள்செய்யில்-கொடுப்பானேயானால்*
*வினைத்திருப்பு-இருவினைகளின் போராட்டுக்கு*
*அழன்-வருத்தப்படமாட்டேன்*
*இக்கு-தேனை*
*உகு-சொரிகின்ற*
*அலரோன்செய்-மலரம்புகளையுடைய மன்மதன் புரியும்*
*தீமையும்-போரின் கொடுமையும்*
*தீர்தரும்-இல்லாது ஒழியும்*
*எ-று. ஏ-ஈற்றசை.* 1

தீராத காமக் கடற்சுழிப் பட்டுத் தினந்தினம்நொந்
தீராத காமனத் தின்பிற்செல் லாநலம் சித்திக்கும், அஃ
தீராத காமத் தவமும்உண் டாம்,பெருஞ் சீர்ப்பழனித்
தீராத காமயி லாவேற்கந் தாவெனச் சிந்தியுமே.

தீராத-வெறுக்கமுடியாத
காமக்கடல்-பெண்ணாசையான கடலின்
சுழிப்பட்டு-சுழலிற்சிக்கி
தினந்தினம்-நாள்தோறும்
நொந்தீர்-வருந்தியவர்களே!
ஆ-ஆவென்று இரங்குமாறு
தகா-தகுதியற்ற
மனத்தின்பின் - மனம்போனபடி
செல்லா-சென்று உழலாத
நலம்-நல்ல நெறியை
சித்திக்கும்-கொடுக்கும்
அஃது-அந்நலம்
ஈராது-என்றும் குறையாததாகும்
அகாம-இச்சையின்றிச் செய்யும்
தவமும்-தவப்பேறும்
உண்டாம்-கைவரப் பெறலாம்: அது யாதென்றால்
பெருஞ்சீர்-மிகச்சிறப்புள்ள
பழனி-பழனியில் எழுந்தருளிய
தீரா-தீரனே!
தகா-தக்கவனே!
மயிலா-மயில்வாகனனே
வேற்கந்தா-வேலணிந்த கந்தனே
என-என்பதாகச் சொல்லி
சிந்தியும்-தியானிப்பீர்களாக
எ-று. ஏ-அசை. 2

சிந்தை யிலங்கற் கிரிதாழ்த்தி லேம்,மறைச் சென்னிநலம்
சிந்தை யிலங்க விழைந்தேங்கு கின்றனம்; தீங்கவுணர்ச்
சிந்தை யிலங்கரத் தானுல வாப்புகழ்த் தேன்பழனிச்
சிந்தை யிலங்கசந் தாரிடைச் சேர்த்தருள் செய்யினன்றே.

சிந்தை-உயிரைப்பற்றியகவலை
இலம் சிறிதும் கொண்டிலேன்
கற்கிரி-மலைக்கோயில்களில்
தாழ்த்திலேம்-தலைதாழ்த்தி வணங்கிலேன்
மறை-வேதங்களின்
சென்னி-முதலானபிரணவப்
நலம்-உணர்வை பொருளினது
சிந்தை-மனத்தில்
இலங்க-விளங்கவேண்டி
விழைந்து ஆவல்கொண்டு
ஏங்குகின்றனம்-ஏக்கமடைகின்றேன்
(ஆதலால், திருவுளமிரங்கி)
தீங்கு-தீமைமிக்க
அவுணர்-அரக்கர்களை
சிந்து-அழித்தருளிய
அயில்-வேலாயுதமணிந்த
அங்கரத்தான்-அழகிய கைப் பெருமான்
உலவா-நீங்காமல் வசிக்கின்ற
புகழ்-சிறப்பு மிகுந்த
தேன்பழனி-அழகியபழனி யிடத்து
சிந்தை-கடல்போல் துயர்தரும்
இல்லம்-இல்லறவாழ்வை
கசந்தாரிடை-துறந்த தவவாழ் வினர் கூட்டத்தில்
சேர்த்து-என்னைச் சேரச் செய்து
அருள்செய்யின்-திருவருள்புரியில்
நன்றே-என் விருப்பம் நிறைவேறும். எ-று. 3

செய்யதண் டங்கைய தாகும் பழனியிற் சேய்,செயந்தோய்
செய்யதண் டங்கை அணிவான் பதந்தொழும் சீரியர்க்குச்
செய்யதண் டங்கை அடுபோர்க் களம்குன்று சீர்த்தகவி
செய்யதண் டங்கைய வாசித்தி மெய்யோடு சேர்முத்தியே.

செய்ய-வயல்களிடத்து
தண்-குளிர்ச்சியானது
தங்கு-நீர்வளத்தால் தங்கப்பெற்று
ஐயது-அழகுடையதாக
ஆகும்-அமையப்பெற்ற
பழனியில்-பழனித்தலத்திலுள்ள
சேய்-முருகக் கடவுள்
செயம்தோய்-வெற்றியுடைய
செய்ய-சிறப்பான
தண்டம்-தண்டாயுதத்தை
கை-திருக்கரத்தில்
அணிவான்-புனைந்துள்ள பெருமானது
பதம்-திருவடிகளை
தொழும்-வணங்குகின்ற
சீரியர்க்கு-அடியவர்கட்கு
செய்யது-சிறப்பு யாதென்றால்
அண்டம்-பல அண்டங்களை ஆண்ட
கை-சமர்த்தனான சூரன் ஆற்றலை
அடு-அழித்தருளிய
போர்க்களம்-போரின் வெற்றியையும்
குன்று-குன்றுதோறாடலின் சிறப்பையும்
சீர்த்த-உயர்ந்த சந்தமுதலான
கவி-பாடல்களால் துதிப்பதை
செய்ய-செய்வதொன்றும்
தண்டம்-வணங்குவதொன்றும்
கையவா-கைமேற்பயனாக
சித்தி-எட்டுவிதச்சித்திகளும்
மெய்யொடு-இந்தவுடலோடு
சேர்-திருவருளுடன் ஒன்றுபடும்
முத்தியே-வீடுபேறுமேயாம்
என்றவாறு. 4

சேரன்ப ராவி யனையான்,வண் கேரளத் தெய்வமன்ன
சேரன்ப ராவிய கோயிற் பழனிச் சிலம்பன் உண்ணஞ்
சேரன்ப ராவியற் பாவாணன் என்னைத் திருத்தினன்,மால்
சேரன்ப ராவிபங் குந்தனத் தார்க்கவர் சித்துளதே.

சேர்-தன்பால் வந்து அடைகின்ற
அன்பர்-அடியவர்களது
ஆவி அனையான்-உயிரை ஒப்பானவன்
வண்-வளமான
கேரள-மலைநாட்டினருக்கு
தெய்வம் அன்ன-தெய்வம் போன்றுள்ள
சேரன்-சேரமன்னவன்
பராவிய-திருப்பணிசெய்து போற்றிய
கோயில்-திருக்கோயிலைக் கொண்ட
பழனிச்சிலம்பன்-பழனிமலையுடையவன்
உள்-எனதுமனம்
நஞ்சு-நைந்துருகும்
ஏர் அன்பு-அழகிய அன்பானது
அரு-குறையாத
இயல்பாவாணன்-தமிழ்ப்புலவன்
என்ன-என்று உலகம் கூறும்படி
திருத்தினன்-ஆக்கிக்கொண்டான்
மால்-செருக்கடைகின்ற மக்கள்
சேரன்-அடையமாட்டேன்
பரு ஆ-மலைபோற்பெருத்து
இபங்கும்-அசைகின்ற
தனத்தார்க்கு-சில மாதர்கட்கும் கூட
அவர்-அப்பழனியாண்டவனது
சித்து-அருளாடல் அடிமையாக ஏற்கும் தன்மை
உளது-இருக்கின்றது.
ஏ-று. ஏ-ஈற்றசை.

5

சித்தருக் காதரம் ஆகிப் பழனித் திகிரிஉற்றாய்
சித்தருக் காதர் அகந்தீர்க்கும் வீறுடைச் சிலர்முன்,நே
சித்தருக் காதரங் குன்றாத வாறுன் திருப்புகழ்பே
சித்தருக் காதரத் தக்கஎன் நெஞ்சைத் தியக்கிடலே.

சித்தருக்கு-சித்துள்ளதவசிகட்கு
ஆதரம்ஆகி-ஆதரவுநல்கி
பழனி-பழனிப்பதியில் உள்ள
திகிரி-மலைக்கோயிலின்கண்
உற்றாய்-எழுந்தருளியுள்ள கடவுளே
சித்து-அறிவினை
அருக்கு-குறைக்கின்ற
ஆதர்-குற்றமுடையவர்களின்
அகம்-ஆணவத்தை
தீர்க்கும்-அறச்செய்கின்ற
வீறுஉடை-அருட்பெருக்குடைய
சிலர்-பெரியோர்கள்
முன்-பழங்காலந்தொட்டு
நேசித்த-அன்புபாராட்டுகின்ற
ருக்கு-வேதங்களின்மீதுள்ள
ஆதரம்-அன்பு
குன்றாதவாறு-குறையாதபடி
உன் திருப்புகழ்-உமதுபெருமைகளை
பேசி-எடுத்துக்கூறி
தருக்கா-ஊக்கமிருக்கின்றதும்,
தரத்தக்க-உமக்குத்தரக்கூடியதுமான
என்-அடியேனுடைய
நெஞ்சை-உள்ளத்தை
தியக்கிடல்-உலக ஆசைகளில் மயங்கச்செய்யவேண்டாம்
எ-று. ஏ-அசை. 6

தியக்கந் தராநலம் யாதெனத் தேறிற், சிவந்தருசத்
தியக்கந் தராசில் பழனா புரிக்குகர் சீர்திகழ்சித்
தியக்கந் தராதியர்க் கோர்தஞ்ச மானவர் செம்புகழ்ஓ
தியக்கந் தராமுழு வெண்ணீறு பூசித் திரிதரலே.

தியக்கம்-ஆசையால்வரும்மயக்கம்
தரா-கொடுக்காத
நலம்-நல்லபற்றுக்கோடாவது,
யாதென-எது என்று
தேறில்-தெரியுங்கால்
சிவந்தரு-சிவபிரானால் உதவிய
சத்திய-உண்மைப்பொருளான
கந்தர்-கந்தக்கடவுளும்,
ஆசுஇல்-குற்றமற்ற
பழனாபுரி-பழனியில்எழுந்தருளிய
குகர்-குகப்பெருமானும்.
சீர்திகழ்-சிறப்புவாய்ந்த
சித்து-சித்தாடல்களை, உலகநலமாக
இயக்கு-செய்கின்ற
அந்தர்-அழகினையுடையது
ஆதியர்க்கு-அருளாளர்கட்கு
ஓர்-ஒப்பற்ற
தஞ்சம் ஆனவர்-துணையாயிருப்பவருமான முருகவேளுடைய
செம்-செம்மையான
புகழ்-திருப்புகழை
ஓதி-பாராயணைப்புரிந்து
அக்கு-உருத்திராக்கமணிந்து
அம்தரா-அழகினைத்தருவதான
முழு-உடல்முற்றும் விளங்க
வெண்ணீறு-திருநீற்றினை
பூசி-தரித்து
திரிதரல்-அவனருளை நாடி, திருத்தல யாத்திரை செய்வதுமேயாம்
எ-று. ஏ-அசை. 7

திரிசங்கத் தானவில் சீர்த்திப் புலவன், திருவிழந்த
திரிசங்கத் தானம் பெறநல்கி னான்,அன்னார் சிந்தையிற்க
திரிசங்கத் தானண்ணு சீராவி னன்குடிச் சென்றிறைஞ்சித்
திரிசங்கத் தானவர்ச் செற்றுயர்ந் தார்கள் சிலரல்லரே.

திரி-தலை, இடை, கடை, என மூன்றான
சங்கத்தான்-சங்கத்தலைவரான
நவில்-போற்றத்தக்க நக்கீரர்
சீர்த்தி-சிறப்புவாய்ந்த
புலவன்-முழுப்புலமை யுடையவன்
திருஇழந்த-செல்வத்தைக் கைவிட்ட
திரிசங்கு-திரிசங்கு மன்னன்
அ. தானம்பெற-வானுலகில் இருக்க
நல்கினான்-இடமளித்த விசுவாமித்திரரை
அன்னார்-ஒப்பான முனிவர்கள்
சிந்தையில்-உள்ளத்தினிடம்
கதிர்-ஒளிக்கிரணம்
இசங்க-தங்கும்படி யமர்ந்த
தான் முருகப்பெருமானாவார்
நண்ணு-எழுந்தருளியுள்ள
சீர்-சிறப்புமிக்க
ஆவினன்குடி-திருவாவினன் குடிக்கோவிலில்
சென்றிறைஞ்சி-போய் வணங்கி
திரி-இனமாறுபாட்டைத் தருகிற
சங்க-கூட்டமான
தானவர்-அசுரர்களை
செற்று-அழித்து
உய்ந்துளார்கள்-வீடுபேறுற்றவர்கள்
சிலர் அல்லர்-பலராவார் என்க
எ-று. ஏ-அசை. 8

சிலசந்த மாலைக்கும் பேறளிக் கின்றிலை, தீமுற்கொல்லும்
சிலசந்த மாலைவிண் ணிற்றீர்க்கும் என்பவர்ச் சீறிநொந்தேச்
சிலசந்த மாலயன் இந்திர னாதிய தேவர்கட்குஞ்
சிலசந்த மாலை மலிவய லூர்க்கட்செய் தேசிகனே.

சில-ஒரு சில தொகுதியான
சந்தமாலைக்கும்-வண்ணப்பாடல் கட்குமாவது
பேறு-உரிய அருட்செல்வத்தை
அளிக்கின்றிலை-கொடுக்கவில்லை
தீமுன்-வேள்விநெருப்பின் முன்பு
கொல்லும்-கொல்லப்படுகின்ற
சில்அசம்-சில ஆடுகள்
தம்மாலை-தமது புலனிச்சைகளை
விண்ணில்-தேவருலகில்
தீர்க்கும்-நுகரச்செய்யும்
என்பவர்-என்று கூறுபவர்களை
சீறி-கோபித்து
நொந்து-மனம் வருந்தமுற்று
எச்சில்-இகழும் நிலையில்
அசந்தம்-சோர்வடைந்தேன்
மால்-திருமால்
அயன் ஆதிய-பிரமன் முதலாய
தேவர்கட்கு-வானவர்கட்கு
உஞ்ச-அவ்வுயிர்கள் பிழைத்து வாழச் செய்யும்
சந்தம்-கருணைக்குணம்
இல-இல்லைபோலும்
ஆலை-கரும்பாலைகள்
மலி-மிகுதியாயுள்ள
வயலூர்க்கண்-பழனியம்பதியில்
செய்-(அவ்வுயிர் வாழ்தற்கான அறச்செயலை) நான்செய்ய அருளவேண்டும்
தேசிகனே-சற்குருநாதரே.
எ-று. 9

தேசமனந்தத் தனேகம் சிலம்பிற் றினமவிரும்
தேச மனந்தத்தம் செய்வார் உணருந் திருவருள்வித்
தேச மனந்தத்தன் பாலா! பழனியிற் செய்யும் என்னுத்
தேச மனந்தத்தவம்நீட வேண்டுவசித்திக்கவே.

தேசம்-நாடுகள்
அனந்தத்து-பலவற்றுள்ளும்
அனேகம் மிகுதியாக
சிலம்பில்-பலகோவில்களில்
தினம்-நாள்தோறும்
அவிரும்-சிறப்பாக விளங்குகின்ற
தேச-ஒளிமயமானவனே!
மனம்-தன் உள்ளத்தை
தத்தம் செய்வார்-உமக்கேஒப்புவிக்கும் அன்பர்
உணரும்-அறியத்தக்க
திருவருள் தெய்விகமிக்க
வித்தே-ஞானவிதையானவனே!
சமன்-எமனுக்கு
அந்தத்தன்-காலனை விளங்கும் சிவனது
பாலா-குமாரனே!
பழனியில்-பழனிப்பதியில் தங்கி
செய்யும்-தவம்புரிகின்ற
என்-அடியேனுடைய
உத்தேசம்-எண்ணமாவது
மன்-நிலைத்த
அந்த-அழகுள்ள உன்னைத் தியானிக்கின்ற
தவம் நீட-தவம் பெருகவும்
வேண்டுவ-உலக நன்மை பற்றிக் கருதும் பேறு
சித்திக்க-கைகூடவுமேயாம்
எ-று. ஏ-அசை. 10

திக்கத்தி யானவை போல்வார் பழனிச் சிலம்பி னன்றித்
திக்கத்தி யானவை யங்களை வான்றன் திருப்புகழ்கத்
திக்கத்தி யானவை தீரச்செய் வான்பண்டு திண்கையினு
திக்கத்தி யானவை யிற்சூரற் காணச்செய் சீர்பெரிதே.

திக்கு-எட்டுத் திசைகளிலுள்ள
அத்தி ஆனவை-யானைகளை
போல்வார்-ஒத்த வீரர் வாழ்கின்ற
பழனி-பழனி என்னும்
சிலம்பினன்-மலையையுடையவன்
தித்திக்க-இனிமையாகப் புரியும்
தியான-தியானமுடையவரது
ஐயம்-சந்தேகங்களை
களைவான்-நீக்கத்தக்கவன்
தன்-அப்பெருமானது
திருப்புகழ்-அருட்பாடல்களை
கத்திக்கத்தி-மிக உரக்கப்பாடிய
யான்-அடியேனது
நவை-குற்றங்களை
தீர-முற்றும் நீங்கும்படி
செய்வான்-செய்யும் கருணையுளான்
பண்டு-முற்காலத்தில்
திண்கையின்-தன் வலியகையினால்
நுதி-கூர்மையான
கத்தியான்-வாளேந்திய வீரவாகு
அவையில்-சபையோர் முன்பு
சூரன்-சூரபத்மன்
காண-காணும்படி
செய்-செய்த வீரச்செயலின்
சீர்-சிறப்பு
பெரிது-மிகப் பெரியதாகும்.
எ-று. ஏ-அசை. 11

சீரணி யாமதன் கண்டுளம் நாணத் திகழ்ந்தபெருஞ்
சீரணி யாமதர்க் கண்வள்ளி மோகத்திற் சிக்கிக் கொண்டாய்
சீரணி யாமத லைப்பெருக் காதிய சேர்பழனிச்
சீரணி யாமதம் ஆகாத வாறுன் செயலருளே.

சீர்-அழகமைந்த
அணியாம்-மாதர்படையுடைய
மதன்-மன்மதன்
கண்டு-பார்த்து
உளம்நாண-மனம்வெட்கும்படி
திகழ்ந்த-விளங்குகின்ற
பெரும்சீர்-பெருஞ்சிறப்புகளின்
அணியா-வரிசையுடையவனே
மதர்க்கண்-கண்ணழகுடைய
வள்ளி-வள்ளிநாயகியின்
மோகத்தில்-இச்சையில்
சிக்கிக்கொண்டாய்-அகப்பட்டவனே
சீரணியா-அழிவற்ற
மது-தேன் ஓடையில்
அலை-வீசும் அலைகள்
பெருக்கு-மிகுதி
ஆதிய-முதலாயுள்ள சிறப்பு
சேர்-சேரப்பெற்ற
பழனி-பழனியம்பதியின்
சீர்-உமது திருவருளின் சிறப்பை
அணி-பொருந்தப்பெற்று
யாம்-அடியேன்
மதம் ஆகாதவாறு-ஆணவத்தால் வருந்தாவாறு
உன்செயல்-உம்மை வணங்கும் செயலை
அருள்-தந்தருள வேண்டும்.
ஏ-று. ஏ-அசை. 12

செயலைத் தருதிருத் தேவிட மென்பவர்ச் செற்றவன்நேர்
செயலைத் தருதி, அவரினும் தீயர்ச் செறல்விழைந்தேன்
செயலைத் தருதிகழ் சீர்வைய லூர்க்குக செத்தொழியச்
செயலைத் தருதிக் கைக் காதாரம் நீயெனத் தேர்ந்துளனே.

செயலைத்தரு- அசோகமரநிழல்
திருத்தேவு-தம்கடவுளுக்கு உரிய
இடமென்பவர்-தலமென்னும் சமணரை
செற்றவன்-வென்ற ஞானசம்பந்தரை
நேர்-ஒப்பான, அருளாளராது
செயலை-உலக நலச் செய்கையை
தருதி-யான்செய்யத் தருவீராக!
அவரினும்-அந்தச் சமணரைவிட
தீயர்-கொடியபுறச்சமயத்தினரை
செறல்-அழிப்பதை
விழைந்தேன்-செய்ய விரும்பினேன்
செய்-வயல்களில்
அல்-கருமையான பசுமைமிக்க பயிர்கள்
தரு-அழகு மிகுவதாய்
திகழ்-விளங்குகின்ற
சீர்-சிறப்புடைய
வயலூர்-பழனிப்பதியினைக் கொண்ட
குக-குகப்பெருமானே!
செத்து-இறந்து
ஒழிய-வீணே அழியும்படி
செயல்-செய்துவிடாதே!
ஐத்தர்-தலைமையான அருளாளர்
உதிக்கைக்கு-உலகில்தோன்றுதற்கு
ஆதாரம்-அருள் வழங்கத் தக்கவன்
நீ என-நீதான் என்பதாக
தேர்ந்துளன்-உறுதியாக அறிந்திருக்கின்றேன்.
ஏ-று. ஏ-அசை.

தேரலங் காரந் திகழ்வய லூரன், திருவருளைத்
தேரலங் காரம் விழைந்தேங்கு கின்றனம் தெய்வகணத்
தேரலங் காரணச் சென்னி இகழ்ந்த செகமெனும்பேய்த்
தேரலங் காரச் சிவஞானத் தேன்சுவை தேக்கலென்றே.

தேர்-தேரினது
அலங்காரம்-அழகு
திகழ்-சிறந்துள்ள
வயலூரன்-பழனிப்பெருமானுடைய
திருவருளை-அருட்பெருமையை
தேரலம்-தெரிந்தோமில்லை
காரம்-பொன்னே பெரிதென்று
விழைந்து-பெறவிரும்பி
ஏங்குகின்றனம்-ஏக்கமடைகின்றோம்
தெய்வகணத்து-தேவர்கூட்டமெலாம் புகழும்
ஏர்-அழகமைந்து
அலங்கு-ஒளியமைந்த
ஆரண-வேதங்களின்
சென்னி-தலைமையான நூல்களால்
இகழ்ந்த-இழித்துக்கூறப்பட்ட
செகமெனும்-உலக ஆசைகள்
பேய்த்தேர்-பொய்யான கானல் நீர் ஒத்த
அல்-அஞ்ஞான இருள்
அங்கு ஆர-மனதைவிட்டொழியும்படி
சிவஞான-பேரின்பமாகிய
தேன்சுவை-அருளின்பம்
தேக்கல்-உள்ளத்தே நிரம்புவது
என்று-எப்போது?
எ-று. ஏ-அசை. 14

தேக்கந் தரத்தர்தம் சேனாதிபர்பெருஞ் சீர்ப்பழனித்
தேக்கந் தரத்த நிறச்சேவல் ஏந்துகைச் சேவக, பைந்
தேக்கந் தரத்தடங் குன்றுதோ றேத்திநிற் சேரலிச்சித்
தேக்கந் தரத்த திகமெய்தி னேற்கருள் செம்புகழே.

தேக்கு-இன்பவாழ்வு நிறைந்த
அந்தரத்தர்தம்-தேவர்களது
சேனாதிப-சேனைத்தலைவனே
பெருஞ்சீர்-பெரிய சிறப்புள்ள
பழனித்தே-பழனித்தெய்வமே!
கந்த-கந்தக்கடவுளே
ரத்தநிற-செந்நிறமமைந்த
சேவல்-கோழிக்கொடியை
ஏந்து-தாங்கிய
கைச்சேவக-கையுள்ள வீரனே!
பைந்து-பசிய நிறத்தை
ஏ-பொருந்திய
கந்தர-மேகமண்டலம் சூழ்ந்த
தடம்-விசாலமான
குன்று தொறு(ம்)-மலைக்கோயில் தோறும்
ஏத்தி-சென்று துதிசெய்து
நின்சேரல்-உம்மைவந்தடைய
இச்சித்து-மனத்தில் விரும்பும்
ஏக்கம்-பேராசையானது
தரத்து-என்தகுதிக்கு
அதிகம்-மேம்பட்டதாக
எய்தினேற்கு-கொண்ட அடியேற்கு
செம்-மேலான
புகழ்அருள்-கீர்த்தியைத் தர வேண்டும்.
எ-று. ஏ-அசை. 15

**செம்பாக மான கவியால்நிற் போற்றிச் சிறுமியர்சொற்**
**செம்பாக மானவை தீர்ந்துயக் காத்தருள்! தீயில்வரும்**
**செம்பாக மானடத் தற்கெனத் தண்ணிய தெண்புனலிற்**
**செம்பாக மான வயலூரில் நீடும் சிலம்பினனே**

*செம்பாகம் ஆன-எளியநடையால் ஆகிய*
*கவியால்-பாடல்களால்*
*நிற்போற்றி-உன்னைத்துதிசெய்து*
*சிறுமியர்-இளமாதரது*
*சொல்-சொற்கள்*
*செம்-பாகு-செம்மையான பாகுஒத்த இனிமையாகி*
*அ(ம்)மால்-அந்த மயக்கம்ஆன*
*நவை-குற்றம்.*
*தீர்ந்து-மனதை விட்டு நீங்கி*
*உய்ய-பிழைக்கும்படி*
*காத்து அருள்-அருள்புரிய வேண்டும்*
*தீயில்-வேள்வித்தீயில்*
*வரும்-தோன்றிய*
*செம்பு-செம்பினை ஒத்த*
*ஆக-செந்நிறமான*
*மா-ஆட்டினை-குதிரைபோல*
*நடத்தற்கென - அடக்கிச்செலுத்தும்பொருட்டு*
*தண்ணிய-குளிர்ந்த*
*தெண்-தெளிந்த*
*புனலில்-சரவணப்பொய்கையில்*
*செம்-பிறந்த (செனித்த)*
*பாக-புயவலிமையுடையவனே!*
*மான-பெருமைமிக்க*
*வயலூரில்-பழனித்தலத்தில்*
*நீடும்-சிறந்துள்ள*
*சிலம்பினனே-மலைத்தெய்வமே.*
*எ-று.* 16

**சிலம்பகத் தையருய் வான்சிவன் தந்தசெஞ் சேய்,பழனிச்**
**சிலம்பகத் தையன், மருநீபம் ஆர்ந்த திருவடிநச்**
**சிலம், பகத் தையலர் மால்வே ரறுத்திலம், செந்துவர்வாய்ச்**
**சிலம்பகத் தைய,வெண் புட்பரி யானைச் செயிப்பதற்கே.**

*சிலம்பு - வருத்தத்தை*
*அகத்து-மனதிற்கொண்ட*
*ஐயர்-தேவர்கள்*
*உய்வான்-அசுரரிடமிருந்து பிழைக்க*
*சிவன் - சிவபிரான் கண்வழி*
*தந்த-உதவிய*
*செம்-செந்நிறமமைந்த*
*சேய்-முருகக்கடவுள்*
*பழனி-பழனியம்பதியிலுள்ள*
*சிலம்பகத்து-மலையிற்கோயில் கொண்ட*
*ஐயன்-தலைமைப்பரம் பொருள் அப்பெருமானுடைய*
*மரு-மணமிக்க*
*நீபம்-கடம்பமலரை*
*ஆர்ந்த-பெருந்தியுள்ள*
*திருவடி-பாதங்களை*
*நச்சிலம்-விரும்பினோமில்லை*
*பகு-மனதைப்பிளவுபடுத்தும்*
*அத்தையலர்-அந்தமாதர்களின்*
*மால்வேர்-ஆசையின்வேரை*
*அறுத்திலம்-அறச்செய்தோமில்லை*
*செம்-செந்நிறமான*
*துவர்வாய்ச்சி-பவளம்போன்ற இதழுள்ள*
*லம்பகத்து-வள்ளி, தெய்வயானை, சூட்டிய மண மாலையணிந்த*
*ஐய-தலைவனே*
*வெண்புள்-அன்னப்பறவை*
*பரியானை-உடையவனுனபிரமனை*
*செயிப்பதற்கு-வெல்லும் பொருட்டு*
*எ-று. ஏ-அசை* 17

பதனம் பதனம்போன் னேதுணை யென்று படிறுசெய்வம்
பதனம் பதனம் பெருகாபத் தென்றுணர் பண்பருள்பல்
பதனம் பதனம் பிறழாச் சிவன்றரு பால!பொய்வெற்
பதனம் பதனம் பழனியப் பா!மெய்ப் பரத்துவனே

*பதனம்பதனம்-கவனமாகுக கவனமாகுக*
*பொன்னே-பொருட்செல்வமே*
*துணை-பற்றுக்கோடாகும்*
*என்று-என்பதாக எண்ணி*
*படிறுசெய்-குற்றம்புரிகின்ற*
*வம்பு அதனம்-வீணான செய்கை மிகுதியால்*
*பதனம்-பாவங்களை*
*பெருகு-அதிகரிக்கச்செய்தல்*
*ஆபத்து-அபாயகரமானது*
*என்று உணர்-என்றறிகின்ற*
*பண்பு-நற்குணத்தை*
*அருள்-தந்தருள்வீராக!*
*பல்-பலவாகிய*
*பத-பதவிகளில் இருப்பவர்களும்*
*நம்பு-நம்புகின்ற*
*அதனம்-மேன்மை*
*பிறழா-நீங்காத*
*சிவன்-சிவபிரானால்*
*தருபால-பெற்றகுமாரரே*
*பொய்வெற்பு-மாயமான கிரவுஞ்சமலையையும்,*
*அம்பு-கடலையும்*
*அத-அழித்தவரே!*
*நம்-நமதன்புக்குரிய*
*பழனியப்பா-பழனியாண்டவரே!*
*மெய்-அழிவற்ற*
*பரத்துவனே-தலைமைக்கடவுளே*
*எ-று.* 18

பரத்தைய வாவுடை யாற்குக்கைக் கிள்ளைப் பதமளித்த
பரத்தைய வாவுகைப் போன்புதல் வா!தேன் பழனியப்பா
பரத்தைய வாவுநெஞ் சாற்றளர்ந் தேற்கருட் பார்வைநல்கம்
பரத்தைய வாவுட் கனலூட னந்தம் பகர்ந்தனையே.

*பரத்தை-விலைமாதரது*
*அவா-ஆசையை முதலில்*
*உடையாற்கு-கொண்ட அருணகிரிநாதருக்கு*
*கை-கையிற்கொள்ளும்*
*கிள்ளைப்பதம்-கிளியான சிறப்பை*
*அளித்த-கொடுத்தருளிய*
*பரத்து-பரத்துவமுடைய*
*ஐய-அழகனே*
*ஆ-இடபத்தை வாகனமாக*
*உகைப்போன்-செலுத்தும் சிவனது*
*புதல்வா-குமாரனே!*
*தென்பழனி-அழகிய பழனிப்பதியின்*
*அப்பா-கடவுளே*
*பரத்தை-முத்திவீட்டைப்பெற*
*அவாவும்-விரும்புகின்ற*
*நெஞ்சால்-மன எழுச்சியால்*
*தளர்ந்தேற்கு-வருந்தும் அடியேனுக்கு*
*அருட்பார்வை-கருணைக்கண் ணருளை*
*நல்கு-கொடுத்தருளவேண்டும்*
*அம்பரத்து-வானுலகத்தவரது*
*ஐய-தலைவனே*
*வா-என்முன் வருவது வேண்டும்*
*உட்கனலூடு-என் மன வெளியில் வந்து*
*அனந்தம்-பல அருள்மொழிகளை*
*பகர்ந்தனையே-கூறியருளினையே.*
*எ-று.* 19

பகரவி லாசர், பழனிக் கிறையவர், பத்தோடெட்டம்
பகரவி லாசற நின்றூர் அவரைப் பரவிலர்பல்
பகரவி லாசகக் கோட்டிலே நாடிக்கோள் பாங்கரன்றிப்
பகரவி லாசச்சி தானந்த ஞான பலத்தரன்றே.

*பகர-அலங்காரச்சிறப்பு*
*விலாசர்-மிகுதியுடையவர்.*
*பழனிக்கு-பழனிப்பதிக்கு*
*இறையவர்-தலைவராவர்.*
*பத்தொடு-பத்தென்றெண்ணோடு*
*எட்டு-எட்டுகூடியதொகையுள்ள*
*அம்பகர்-கண்களைக்கொண்டவர்*
*அ-அந்த*
*இல் சிறப்பாகிய*
*ஆசுஅற-குற்றமில்லாதபடி*
*நின்றூர்-நிலையாகவுள்ளவர்*
*அவரை-அத்தகையபெருமானை*
*பரவிலர்-வணங்காதவர்கள்*
*பல்பகர்-பலயோனிகளிலும்*
*பிறப்பவராவார்கள்.*

*அவில் ஆ (அவ்விதமான) துயரம் தருவதான*
*சக-உலகிற் பிறந்து*
*கோட்டிலே-உயிரின்ஒதுக்கிடமாக*
*நாடிக்கொள்-உடலைப்பெறும்*
*பாங்கர் இழிநிலையுடையவராவர்*
*அன்றி-அதையல்லாமல்*
*பகரஇலா-சொல்லற்கரிய*
*சச்சிதானந்த-இறையருளில் ஒன்றுபடுவதான பேரின்பந் தரும்*
*ஞான-உண்மைநிலையைப்பெறும்*
*பலத்தர்-வல்லமையுடையவர்*
*அன்று-ஆவதில்லை.*
*எ-று. ஏ-அசை.* 20

பலகண் டனச்சேல்வம் பெற்றூர் இகலடும் பன்னிருதோட்
பலகண் டனமொழிக் குஞ்சரி நாயக! பற்றுகனற்
பலகண் டனந்தன! தென்பழ னுபுரிப் பண்ணவ!ச
பலகண் டனஞ்செயும் பேறெனக் கீந்தருள் பாருய்யவே.

*பல-பலவான*
*கண்-கண்களை*
*தன-உடம்பிற் கொண்டு*
*செல்வம்-வேறு பல இன்பங்களை*
*பெற்றூர்-உடைய தேவேந்திரன்*
*இகல்-பகையான சூராதிகளை*
*அடும்-கொன்றருளிய*
*பன்னிருதோள்-பன்னிருபுயங்களின்*
*பல-பலத்தையுடையவனே!*
*கண்டு அன கற்கண்டு போன்ற*
*மொழி-இனிய சொற்களைக் கூறும்*
*குஞ்சரி-தெய்வயானையின்*
*நாயக-கணவனே!*
*பற்று-பிடித்தெரியும்படியான*
*கனல்-நெருப்பினையுடைய*

*பல்-பற்களைப்பெற்று*
*அகண்டன்-பரம்பொருளான சிவனது*
*நந்தன-குமரனே*
*தென்பழனுபுரி-அழகிய பழனிப் பதியின்*
*பண்ணவ-தெய்வமே!*
*சபல உறுதியற்ற மனத்தை*
*கண்டனம்-தன்வழிபோகாமல்*
*செயும்-செய்யத்தக்க[தடுத்தலை*
*பேறு-தவவலிமையை*
*எனக்கு-அடியேனுக்கு*
*ஈந்து-கொடுத்து*
*அருள்-அனுக்கிரகிக்க வேண்டும்*
*பார்-இவ்வுலகத்து உயிர்கள்*
*உய்யவே-இன்னலற்று வாழும் பொருட்டு.*
*எ-று.* 21

பாரத னத்தனை யன்னமெய்ச் சீர்இப் படிறன்எய்தப்
பாரத னத்தனை தீயரிற் றீயர் பலாநிறைந்த
பாரத னத்தனை வோங்கலநன் றேதேன் பழனிவெற்பா!
பாரத னத்தனை பாகற்கு ஞானஞ்சொல் பாலகனே

பாரத-பாரதப்போரை நடத்திய
நத்தனை-சங்கமேந்திய கண்ணனை
அன்ன-ஒப்பான
மெய்ச்சீர்-உண்மைக் கீர்த்தியை
இப்படிறன்-இந்தக்குற்றமுள்ள அடியேன்
எய்த-அடையும்படி
பார்-கண் பார்த்தருள வேண்டும்
அதன்-அப்போரில் ஈடுபட்ட
அத்தனை-துரியோதனன் முதலிய
தீயரில்-கொடியோரைவிட
தீயர்-கொடிய பாவிகள்
பலர்-அனேகர்
நிறைந்த-மிகுந்துள்ளதால் (அவர்களைச் சுமக்கின்ற) பாவச்சுமைபற்றி
பாரத-பூமிதேவியின்
அனத்தல்-புலம்பலால் உள்ள
னைவு-துன்பம்
ஓங்கல்-அதிகப்படுவது
நன்றோ-நன்றாகுமோ?
தென்பழனி-அழகிய பழனியில் உள்ள
வெற்பா-மலைக்குரியவனே
பார-பெரிய
தனத்து-தனங்களைக்கொண்ட
அனை-தாயான உமையவளது
பாகற்கு-பாகம் பாதியுடைய பரமனுக்கு
ஞானம்சொல்-பிரணவப் பொருள் கூறிய
பாலகனே-குழந்தைப் பெருமானே.
எ-று. 22

பாலனந் தந்தடி யாரோடேற் கூட்டிப் பரகதியிற்
பாலனந் தந்தழி யாவாற செய்தருள்! பாண்டரங்கன்
பாலனந் தகதங் (கு)கையான் மருக! பழனிவெற்பிற்
பாலனந் தந்தரத் தொண்டரோ டாடுமெய்ப் பண்ணவனே

பால் அனம்-பாலோடு கூடிய உணவை
தந்து-உதவி
அடியாரோடு-உன் தொண்டர்களுடன்
எற்கூட்டி-என்னைச் சேர்த்து
பரகதியில்-முத்தி வீட்டில்
பாலனம் தந்து-என்னைக் காப்பாற்றி
அழியவாறு-வினை இறந்து படாமல்
காத்தருள்-அருள் செய்வீராக
பாண்டரங்கன்-சிவ பெருமானது
பால-குமாரரே
நந்தம்-சங்கு
தகு-பொருந்தியுள்ள
கையான்-கையுடைய திருமாலின்
மருக-மருகரே
பழனி-பழனியில் உள்ள
வெற்பின்பால்-மலையினிடத்து
அனந்தம் தரம்-பலதடவைகளில்
தொண்டரொடு-உண்மையடியவரோடு
ஆடும்-திருவிளையாடல் புரிகின்ற
மெய்-சத்தியவடிவான
பண்ணவனே-புகழுடையவரே
எ-று. 23

பண்ணவ ரையபோன் னூர்க்காவ லானைப், பழனிபுகழ்
பண்ணவ ரையனைப், பாடற் பரிசெனப் பாரதனுப்
பண்ணவ ரையளித் தாலும்பல் லோர்க்கும் பகிர்ந்தழிப்பேன்
பண்ணவ ரையன்னர் சொன்னசின் னூல்களும்
[பாழ்ப்பவன்றே

பண்ணவர்-தேவர்களின்
ஐய-தலைவனாகி
பொன்னூர்-தேவருலகின்
காவலானை-பாதுகாவலற்குரியவ
னுமான முருகக்கடவுளை
பழனிபுகழ்-பழனியன்பர்புகழும்
பண்ணவர்-இசைப்புலவரது
ஐயனை-அழகியபாடலுடையானை
பாடல்-பான்பாடுங்கவிகட்குரிய
பரிசென-கொடைப்பயனாக
பாரதன்-இப்பூமியின்
காப்பண்-நடுவில்இருக்கும்
அ(வ்)வரை-பொன்மலையான
மேருவை
அளித்தாலும்-கொடுத்தாலுங்
கூட
பல்லோர்க்கும்-பலருக்கும்
பகிர்ந்து-பங்கிட்டுதவி
அழிப்பேன்-எனக்கென வைக்கா
மல் செலவிட்டுத் தீர்ப்பேன்
பண்ணவர்-முனிவர்களுக்கு
ஐஅன்னர்-அரசனான அகத்தி
யரை ஒத்த தமிழ்ப் பெரியோர்
சொன்ன-பலர் கூறியதான
சில்நூல்களும்-ஈகைபற்றிச்சிறப்
பித்த நூற்கருத்துக்கள்
பாழ்ப்ப அன்று-பயனற்றதல்ல
எ-று. ஏ-அசை. 24

பவமற வாவிவ் வுலகிற் பிறந்தும் பழனியின்வெற்
பவமற வாழ்க்கையெண் ணுநாளும் போக்கினன்,பைம்புன
பவமற வா;வள்ளி தெய்வானை நாயக, பல்வகைய [லுற்
பவமற வாசிலெண் சித்தியும் வீடும் பரிந்தருளே.

பவம்-பாவச்செயல்புரிய
மறவா-மறவாதவர்பலர்வாழும்
இ(வ்)உலகில்-இப்பூவுலகில்
பிறந்தும்-உடல்பெடுத்தும்கூட
பழனியின்-பழனியில்உள்ள
வெற்பு-மலையிடம் தங்கி
அவம்அற-தீவினைகளைப் போக்க
வாழ்க்கை தங்கிவாழ்வதை
எண்ணு-மனதிற்கொள்ளாமல்
நாளும்-ஒவ்வொருநாளையும்
போக்கினன்-வீணாக்கினேன்;
பைம்புனல்-பசிய சரவணப்
பொய்கையினிடம்
உற்பவ-தோன்றியவனே.
மறவா-மறவனே!
வள்ளி, தெய்வானை-வள்ளி
தெய்வயானை என்பவர்களுடைய
நாயக-கேள்வனே
பல்வகைய-பலவிதமான
பவம்-என்பிறப்பெல்லாம்
அற-அடியேனோடு நீங்கும்படி
ஆசில்-குற்றமற்ற
எண்சித்தியும்-எட்டுச்சித்தியுடன்
வீடும்-முக்திவீடும்
பரிந்து-திருவுள்ளமிசைந்து
அருள்-கொடுத்தருளவேண்டும்
எ-று. ஏ-ஈற்றசை.
25

பரியாச மாரத் தொழிலாதி யுள்ளவன் பால/மயிற்
பரியா!ச மானமில் சீர்வய ஷூர! பழிக்கரும்உம்
பரியாச மாளிக்கி லேன்,பாறை செல்லப் பகர்ந்த தொக்கும்
பரியாச மாயிரஞ் செய்தாய்/நொந் தேன்உயும் பாங்கருளே

பரியா-காப்பதொன்றுடன்
சமார-அழித்தலையும்
தொழில் ஆதி-சிட்டி முதலியவைகளையும்
உள்ளவன்-உடையசிவனது
பால-குமாரனே!
மயிற்பரியா மயில்வாகனனே
சமானமில்-ஒப்பில்லாத
சீர்-சிறப்புகளைமுடைய
வயவூர-பழனியப்பனே
பழிக்கரும்-இகழ்ச்சியில்லாத
உம்பர்-தேவர்கள்போற்றும்
இயா-புகழ்ச்சியுடையவனே
சமாளிக்கிலேன்-தாங்கற்கில்லேன்
பாறை-பாறையான கல்லில்
செல்ல-கிணைந்றடுக்கும்படி
பகர்ந்த-பலதரம் கூறியதை
ஒக்கும்-ஒப்பதாயுள்ள
பரியாசம்-பிறர்நகைக்கும்படியான
ஆயிரம்-பலவற்றை என்னிடம்
செய்தாய்-செய்தனையே
நொந்தேன்-மனமிகவருந்தினேன்
உய்யும்-இனியானதுமகிழ்தற்கான
பாங்குஅருள்-நன்மையைச் செய்
எ-று. ஏ-அசை. 26

பாங்கன தானம் பொலிசீர்கண் டச்சறம் பத்தினிகோள்
பாங்கன தானம் பயந்தசெஞ் செய்தன் பழனிவெற்பின்
பாங்கன தானம் புரிவார்க் கெளியன் பதந்தொழும்நட்
பாங்கன தானம் உறவோரெல் லாம்பெறும் பாக்கியமே.

பாங்கு-தன்னருகில்
அன-நெருங்கி
தானம்-நீர்பெருகிய கம்பைநதி
பொலி-வெள்ளமாகவந்த
சீர்கண்டு-தன்மையை நோக்கி
அச்சறம்-பயமடைந்த
பத்தினி-உமையவளை
கோள்-தன்பாற்கொண்ட
பாங்கனது-சிவபிரானுடைய
ஆனம்-திருமுகங்கள்
பயந்த-தோற்றுவிக்கப்பெற்ற
செம்-செந்நிறமமைானா
செய்தன்-முருகக்கடவுளுக்குரி
பழனி-பழனியின் [மையான
வெற்பின்-மலைத்தலத்தில்
பாங்கு-உரிமைப்பண்புடன்
அன்ன தானம்-சோறளிப்பதான செயலை
புரிவார்க்கு-செய்யும் அன்பர்கட்கு
எளியன்-எளிதிலருள்புரிபவன்
பதம்-திருவடிகளை
தொழும்-வணங்குகின்ற
நட்பு ஆம்-பத்தியாகிய
கனம் தான்-பெருமை ஒன்றே
நம்-நமது
உறவோர்-அன்பரான கேளமாரர்
எல்லாம்-அனைவரும்
பெறும்-அடைகின்ற
பாக்கியம்-செல்வமாகும்
எ-று. ஏ-ஈற்றசை. 27

பாக்கிய கந்தணந் தாள்வான், உமையும் பரமனுங்கோள்
பாக்கிய கந்தன், பழனிக்கு கேசன், பதத்தில்மெய்யன்
பாக்கிய கந்தனில் ஆர்வம் பெருக்கிய பண்பர்முலைப்
பாக்கிய கந்தங்கு மினைனார்த்தரினும் பழிப்பவரே.

*பாக்கி-கன்மம் மாயை என்ற இரண்டு மலமகன்றபின்பும் உள்ளதான*
*அகம்-ஆணவமலத்தையும்*
*தணந்து-அகலச்செய்து*
*ஆள்வான்-அடியவரை ஆள்பவன்,*
*உமையும்-உமையவளோடு*
*பரமனும்-சிவபிரானும்*
*கோள்-சீர்மையுடன் கொள்ளும்*
*பாக்கிய-செல்வக்குமாரனை*
*கந்தன்-கந்தக்கடவுள்.*
*பழனி-பழனியில் எழுந்தருளிய*
*குகேசன்-குகப்பெருமான்*
*பதத்தில்-அவன் திருவடிகளில்*
*மெய்யன்பு-உள்ளன்பினை*
*ஆக்கி-அமையக்கொண்டு*
*அகந்தனில்-மனத்தில்*
*ஆர்வம்-ஊக்கத்தை*
*பெருக்கிய மிகுதியாகப்பெற்ற*
*பண்பர்-நற்குணமுடையவர்களை*
*முலை-தனங்களை*
*பாக்கு-கொட்டைப்பாக்கு போற்கொண்ட*
*இய-புகழ்மிக்கு*
*கம்-வானுலகத்தில்*
*தங்கு தங்கிவசிக்கின்ற*
*மின்னார்-ஊர்வசியாதியமாதர்கள் (அனுபவிக்கும்படி)*
*தரினும்-வலிந்து உதவினாலும்*
*பழிப்பவரே-(இச்சையின்றி) வெறுப்பவர்களேயாவர்.*
*எ-று.* 28

பழிக்கப் படாத நடையோடு தோய்தரு பாதகப்பண்
பழிக்கப் படாத கயம்போலும் நன்னிலை பாலிப்பையோ
பழிக்கப் படாத மதனுணுஞ் சீர்த்திப் பழனியப்பா
பழிக்கப் படாத விளையாடல் கோடி படைத்தவனே

*பழி-வசைக்குரிய விந்தை*
*கப்பு-நிறைந்து*
*அடாத-தகுதியற்ற*
*நடையோடு-செயல்முறைகளோடு*
*தோய்தரு-பொருந்தக்கொண்டவனான என்*
*பாதகப்பண்பு-பாவக்குணத்தை*
*அழிக்கப்படாத-அழிக்கப்பட்டு*
*கயம்போலும்-யானைபோன்ற*
*நன்னிலை-பெருமிதநெறியை*
*பாலிப்பையோ-யான்பெறத் தருவாயோ*
*பழு-முதிரவிளைந்த*
*இக்கு-கருப்புவில்லால்*
*அம்பு-மலரம்புகொண்டு*
*அடு-போர்செய்கின்ற*
*ஆத-குற்றமுடைய*
*மதன்-மன்மதன்*
*நாணுப-வெட்கப்படத்தக்க*
*சீர்த்தி-அழகுசிறந்த*
*பழனியப்பா-பழனியாண்டவனே*
*பழிக்கப்படாத-குறைகூற இல்லாத*
*விளையாடல்-அருளாடல்கள்*
*கோடி-மிகவும்*
*படைத்தவனே-கொண்ட கடவுளே*
*எ-று.* 29

படைத்தவ னஞ்சண் பகமாதி சூடிய பைங்குழலார்
படைத்தவ னஞ்சலர்க் கஞ்சாத வாழ்வருள், பன்னிருதோள்
படைத்தவ/ னஞ்சயின் றுய்ந்தான் புதல்வ' பழனியின்வெற்
படைத்தவ னஞ்சழக் கெல்லா மறியும் பரதெய்வமே

படைத்தவன்-பிரமனுக்கும்
அம்-அழகிய
சண்பகம் ஆதி-சண்பகமுதலிய மலர்களை
சூடிய-அணிந்துள்ள
பைங்குழலார்-மாதர்களை
படை-சேனைகளாக உடைய
தவன்-மன்மதனது
அஞ்சு-ஐந்தாயுள்ள
அலர்க்கு-மலர்க்கணைகளுக்கு
அஞ்சாத-சிறிதும்பயப்படாத
வாழ்வு-தவாநுபூதியை
அருள்-பெறத்தருதல் வேண்டும்
பன்னிருதோள்-பன்னிரண்டு புயங்களை
படைத்தவ-கொண்டபெருமானே!
நஞ்சயின்று-விடத்தைஉண்டும்
உய்ந்தான்-அழியாதசிவபிரான்
புதல்வ-குமாரனே!
பழனியின் வெற்பு-பழனிமலையை
அடை-வந்தடையப்பெற்ற
தவ-தவவேடப்பரனே!
நம்-எம்முடைய
சழக்கு-மனத்தின் இழிவு
எல்லாம்-முழுவதையும்
அறியும்-தெரிந்துள்ள
பர-பரம்பொருளான
தெய்வமே-கடவுளே
எ-று. 30

பரதவித் தார மடவார் கலவியின் பாசமுற்றிப்
பரதவித் தாரணச் சொல்லிகழ் வேனைக்கண்பார்த்தருள்தற்
பரதவித் தாரகந் தோய்ந்தார் பராவும் பழனியின்வெற்
பரதவித் தார கசியஞ்சில் லோர்க்குச்சொல் பான்மையனே

பரத-நடனக்கலையில்
வித்தார-திறமைபெற்ற
மடவார்-மாதர்களின்
கலவியின்-ஆசையான
பாசம்-மோகமானது
முற்றி-முதிரப்பெற்று
பரதவித்து-வருந்தியதன்றி,
ஆரணச்சொல்-வேதவாக்கியத்தையும்கூட
இகழ்வேனை-அவமதிக்கின்றேனை
கண்-உமது கருணைக்கண்ணால்
பார்த்தருள்-கலமுறப்புரிய வேண்டும்
தற்பர-ஞானவடிவானவனே
தவித்தார்-(மனஒடுக்கம்பெற அவாவிய சனகாதியர்
அகம் மனதில்
தோய்வார்-அமைதியைச்செய்த
பராவும்-வணங்கிய சிவன்
பழனியின்-பழனிமலையில்உள்ள
வெற்ப-மலையின் முதல்வனே
ரத-பேரின்பாநுபவத்துக்கு
வித்தா-விதையாயுள்ளவனே
ரகசியம்-வேதமுதற்பொருளுண்மையை
சில்லோர்க்கு-ஒருசிலர்க்குமட்டும்
சொல்-உபதேசித்தருளும்
பான்மையனே-குருநாதனே
எ-று. 31

பானலங் கண்ணிய ராதிய ஏடணை பற்று மென்னைப்
பானலங் கண்ணியன் றுண்டாய்! இன் றெள்ளல்! பழனிவெற்பப்
பானலங் கண்ணிய னந்தமுள் ளாய்!வன் பருப்பதமோப்
பானலங் கண்ணியட் டாற்கினி யானிற் படியில்வையே.

பானல்-குவளை மலரொத்த
அம்-அழகிய
கண்ணியர்-மாதர்
ஆதிய-முதலாகக்கூறும்
ஏடணை-மூன்றாசைகள்
பற்றும்-நெஞ்சிலிடம்பெற்றுள்ள
என்னை-அடியேனை
பா-பாடல்களின்
நலம் கண்ணி-அருமையை நாடி
அன்று-இளவயதிலேயே
ஆண்டாய்-வலிந்தாட்கொண்டாய்
இன்று-இப்போது
எள்ளல்-இகழ்ந்து தள்ளவேண்டாம்
பழனி-பழனி என்னும்
வெற்பு-மலையிற்கோயில்கொண்ட
அப்பா-ஐயனே
நல்அம்-நன்மையும்அழகுமுடைய
கண்ணி-பூமாலைகள்
அநந்தம்-பலவற்றை
உள்ளாய்-அணிந்திருப்பவனே
வன்-வலிமையுள்ள
பருப்பதம்-மலையை
ஒப்பான-ஒத்த பெருவுருவமாக வந்த
லங்கணி-அரக்கியை
அட்டாற்கு-கொன்றஅநுமனுக்கு
இனியானில்-இனியராமாவதாரம் செய்த திருமாலைப்போன்று
படியில்-இவ்வுலகில் (அடியேனை)
வை-உலகநலம்புரியுமாறு வைக்க வேண்டும்
எ-று. ஏ-அசை. 32

படிக மனையவட் குஞ்சில நூல்சொல் பழனியப்பா!
படிக மனைய நிறச்சேவற் கேதனம் பற்றும்கையாய்
படிக மனையச்செய் வார்ச் சீறென் னெஞ்சைப் பரவையிடை
படிக மனையறத் தார்சில ருள்ளும் பதிந்தனையே.

படி-உன்னிடம் பாடம் கற்கின்றவளான
கம்-பிரமனது
மனையவட்கும்-கலைமகட்கும்
சிலநூல்-இலக்கணமுதலியவற்றை
சொல்-ஓதியருளுகின்ற
பழனியப்பா-பழனியப்பனே!
படிகம்-பளிங்கினை
அனையநிற-ஒத்தவெள்ளிறமான
சேவற்கேதனம்-கோழிக்கொடியை
பற்றும்-பிடித்திருக்கின்ற
கையாய்-கையுடையவனே!
படு-மிகுந்தபான
இகமல்-உலக ஆசைகளில்
கைய-வருந்தும்படி
செய்வார்-செய்பவர்களை
சீறு-கோபிக்கின்ற
என்நெஞ்சை-என் உள்ளத்தை
பரவையிடை-இவ்பக்கடலினுள்
படிக-பதியும்படி செய்தருள்வாயாக
மனையறத்தார்-இல்லறத்தினர்
சிலருள்ளும்-ஒருசிலர் உள்ளத்தும்
பதிந்தனையே-ஒன்றியிருக்கின்றனையல்லவா.
எ-று. ஏ-அசை. 33

பதிகம் பலங்கதி யென்றுணர்ந் தேற்றும்இற் பாசமிட்டாய்
பதிகம் பலபனு வற்கொண்டும் வேட்ட பயன்நல்கிலாய்
பதிகம் பலத்தில்வைத் தேத்தற்ப மன்னர்தம் பாலும்விடேல்
பதிகம் பலம்பப் பழனியப் பாஅருள் பக்குவமே.

பதி-ஒளியுடைய
கம்பலம்-கல்லாடையுடையே
கதிஎன்று-துணையென்பதாக
உணர்ந்து-உள்ளபடிஅறிந்து
ஏற்றும்-ஏற்றணிந்த பின்பும்
இற்பாசம்-இல்லறத் தொடர்பை
இட்டாய்-பறக்கொடுத்தாய்;
பதிகம்-பதிகமுதலான
பலபனுவல்-பலதுதிப்பாடல்களை
கொண்டும்-ஏற்றனை (ஆனால்)
வேட்ட-நான்விரும்பிய
பயன்-அருட்பேற்றை
நல்கிலாய்-தராமலிருக்கின்றாய்
பதி-ஊர்மக்களாவார்
கம்பலத்தில் வைத்து-உயர்ந்த
ஆதனத்திலிருக்கச் செய்து
ஏத்து-பாராட்டபெற்ற
அற்பமன்னர்-சிற்றரசர்களான
தமபாலும்-உலோபசிடமும்
விடேல்-செல்லவிடவேண்டாம்
பதி-மனம் பதிந்து
கம்ப-அசைவதான
லம்ப-மாலையணிந்துள்ள
பழனியப்பா-பழனிப் பெருமானே
அருள்-திருவருள்செய்வாயாக!
பக்குவமே-சமயம் இதுவேயாம்.
எ-று. 34

குவலய மாலை யணிதோட் குருவிற் குலவியிந்தக்
குவலய மாலைத் தணந்தென்னை யாண்டருள் கோட்போடே
குவலய மாலையர் தம்பாற்சொல் சீர்த்திக் குகாகுறிச்சிக்
குவலய மாலையன் றுய்வய லூர்நங் குலதேய்வமே.

குவலயமாலை-குவளைப்பூமாலையை
அணி-அணிந்துள்ள
தோள்-புயங்கள்உடைய
குருவில்-குருவடிவாக
குலவி-காட்சிதந்து
இந்தக்குவலய இப்பூமியின்
மாலை-ஆசையானமயக்கத்தை
தணந்து-நீங்கச்செய்து
என்னை-அடியேனை
ஆண்டுஅருள்-ஏற்றருளவேண்டும்
கோட்போடு-வட்டமாகவுள்ள
நகு-ஒளிமிக்க
வலய-சக்கரப்படைபூண்ட
மால்-திருமால்
ஐயர்தம்பால்-தேவர்கள்முன்பு
சொல்-கூறிய
சீர்த்தி-சிறப்புக்களுள்ள
குகா-குகக்கடவுளே
குறிச்சிக்கு-குறிஞ்சிநிலத்துக் குரிய
வல்ஐய-வலியதலைவனே
மாலை-செக்கர்வான்போன்ற
அன்றுய்-செந்நிறமுடையவனே
வயலூர்-பழனியில் எழுந்தருளியுள்ள
நம்-எமது
குலதெய்வமே-சொந்தக்கடவுளே
எ-று. 35

**குலவரை யாவும் புரந்தே பழனிக் குவட்டின்மிசை**
**குலவரை யாகுறக் கோதைபொய் யூடற் குறித்தெழும்ஆ**
**குலவரை யாகத் திருவர்தம் பால, குறைவில்இசைக்**
**குலவரை யாமறைச் சென்னியின் ஞானங் கொடுத்தருளே.**

*குலவரை-சிறந்த மலைகள்*
*யாவும்-பலவற்றையும்*
*புரந்தே-தனதாகக்காத்து*
*பழனி-பழனியில் உள்ள*
*குவட்டின்மிசை-மலையின்மீது*
*குலவு-திருக்கோயில் கொண்ட*
*அரையா-தேவராசனே;*
*குறக்கோதை-வள்ளிநாயகியின்*
*பொய்யூடல்-கபடவூடல் பற்றி*
*குறித்து எழும்-மனதில் உண்டாகும்*
*ஆகுல-வருத்தம் உடையவரே*
*அரை-பாதிபாதியான (ஆண் பெண் கலந்த)*
*ஆகத்து-(உமையொருபாகமான) மேனியுடைய*
*இருவர்தம்-சிவன்உமைஎன்பாரது*
*பால-குமாரனே*
*குறைவில்-குறைவு படாத*
*இசைக்குல-புகழ்மிகுதியுடையவனே*
*வரையா-எழுதற்கில்லாத*
*மறைச்சென்னியின்-வேதமுடியான*
*ஞானம்-பேதமில்லாத இன்பநிலையை*
*கொடுத்து-உதவி*
*அருள்-அருள்புரியவேண்டும்*
*எ-று.* 36

**கோடுவரி யன்னமுண் ணேல்,என் றனேகர்முற் கோரஞ்செய்யும்**
**கோடுவரி யன்னமன் னர்ச்செறும் ஆர்வங் குறிப்பவர்கைக்**
**கோடுவரி யன்னலத் தெந்தாய்! பழனிக் குமர, வைவேல்**
**கோடுவரி யன்னதன் மாவோடு தீயவேல் கோபத்தனே**

*கொடு, வரி-வரியை உடனே கொடு*
*அன்னம் உண்ணேல்-சோறருந்தாதே!*
*என்று-என்பதாகக் கூறி*
*அனேகர்முன்-மக்கள்பலரிடம்*
*கோரம்-வன்முறையை*
*செய்யும்-செய்கின்ற*
*கொடுவரி-வரியுள்ளபுலியை*
*அன்னமன்னர்-ஒத்ததீய அரசரை*
*செறும்-அழித்தொழிக்கும்*
*ஆர்வம்-பேராவலைப்பெற*
*குறிப்பவர்-என்னும் அறவோர்*
*கைக்கொள்-ஏற்றுக்கொள்ளும்*
*துவர்இயல்-பவளம்போன்ற*
*நலத்து-செந்நிறமேனி கொண்ட*
*எந்தாய்-எமது தந்தையே*
*பழனிக்குமர-பழனிக்குமரநாயகனே*
*வை-கூர்மைபெற்ற*
*வேல்கொடு-வேலாயுதத்தால்*
*உவரி அன்னதன்-கடலிடத்துற்ற*
*மாவோடு-சூரனை மாமரத்தோடு*
*தீய-மற்ற அசுரரும் அழிய*
*வெல்-போரில் வெற்றிபெற்ற*
*கோபத்தனே-சினம் கொண்டவனே.*
*எ-று.* 37

கோபத் தனமற வாஇத ழார்மயற் கோட்டியுற்றும்
கோபத் தனமறம் வேட்டேன்,என் றீயுங்கோல்? குற்றமலி
கோபத் தனமறந் தார்சூழ் பழனிக் குவட்டில்வளர்
கோபத் தனமற மென்பார்க் கறவுங் குணக்கந்தனே.

கோப-இந்திரகோபப்பூச்சி போன்ற
தனம்-தன்மையுள்ள செந்நிறம்
அறவா-நீங்கலில்லாத
இதழார்-உதடுகளையுடையமாதர்
மயற்கோட்டி-ஆசைப்பெருக்கம்
உற்றும்-மனதில் இருந்தும்
கோபத்தன்-ஆயர் சேரியில் வாழ்ந்த கண்ணனைப்போல்
அம்அறம்-அழகிய பசுக்காப்புச் செய்தலை
வேட்டேன்-பெறவிரும்பினேன்
என்று-(அந்தவாறுபுரியும் ஆற்றலை) எப்போது
ஈயும்கோல்-தரத்திருவுள்ளம் இசையுமோ?
குற்றமலி-குற்றமிக்க
கோபத்தனம்-சினத்தை
மறந்தார்-கைவிட்ட தவசிகள்
சூழ்-சுற்றியிருக்கின்ற
பழனிக் குவட்டில்-பழனிமலையில்
வளர்-வீற்றிருக்கும்
கோ-தலைவனும்
பத்தல்-பிறர்பொருளைக் கைப்பற்றல்
நம்-எமக்கு
அறம் என்பார்-நலமென்பவரை
கறவும்-சினக்கும்
குண-இயல்புடைய
கந்தன்-கந்தப்பெருமானும் ஆன (முருகப்பெருமான்)
எ-று.
ஏ-ஈற்றசை. 38

குணக்கந் தவிரருட் பேறுற காடிக் குலைகுலைந்து
குணக்கந் தவிரதமெல்லாமுங் கோற்றுங் கொழுப்புடல்மிக்
குணக்கந் தவிரத்தி யெய்தார் பழனிக் குலவரைச்ச
குணக்கந் தவிரடற் றோட்கிள்ளை வாய்த்தமிழ் கூறலரே.

குணக்கம்-மாறுபாடு
தவிர்-இல்லாத
அருட்பேறு-திருவருட்செல்வத்தை
உற-பெறுமாறு
காடி-மிகவும் இச்சையுற்று
குலைகுலைந்து-மனவருத்தமெய்தி
குண சிறப்பான
கந்தவிரதம்-முருகப்பெருமானைக் குறித்தநோன்புகளானவை
எல்லாமும் பலவற்றையும்
கோற்றும்-முறைப்படி செய்துங்கூட
கொழுப்பு-மதமானது
உடல்மிக்கு-உடலில் மிகுந்து
உணக்கு-அதைக் கெடுக்கத்தக்க
அந்த-விரதப்பயனுள்ள
விரத்தி-புலனிச்சையின் வெறுப்பை
எய்தார்-அடையப்பெறுதவர்
பழனி-பழனியின்கண் உள்ள
குலவரை-மலையில் விளங்கும்
சகுண-முருகன்திருவுருவில்
கந்த-தான்போன்று
அவிர்-விளங்குகின்ற
அடல்-வலிமையான
தோள்-தோள்களில் உலவுகின்ற
கிள்ளை-கிளியாக அருணகிரிநாதர்
வாய்த்தமிழ்-பாடியஅருட்கவிகளை
கூறலரே-அப்போடுபடியா
எ-று. தவரேயாம்
39

கூறங்க மாறம் மறைநாலும் போற்றும் குகன்புகழ்ச்சி
கூறங்க மாற குடைவார்க் குருகுங் கொலைஞரும்ந
கூறங்க மாறதிக் கும்பழ னாபுரிக் கோயிலுட்புக்
கூறங்க மாறதக் கன்புரை தீச்சொற் கொடிதிலமே.

கூறு-வேதத்தின்பகுதிகளாகிய
அங்கம்-அங்கங்கள்
ஆறும்-ஆறுவகையும்
மறைநாலும்-நான்கு வேதமும்
போற்றும்-துதிக்கின்ற
குகன்-முருகப்பெருமானது
புகழ்ச்சி-சிறப்பியல்களை
கூறம்-சொல்லாதிருக்கின்றோம்
கம்-நீர்நிறைந்த
ஆறு-நதிகளில்
குடைவார்க்கு-நீராடும்மாதர்கட்கு
உருகும்-நெஞ்சழிகின்ற
கொலைஞரும்-கொடியவர்களும்
நகு-கண்டுபரிகசிக்கும் படியான
ஊறம்-குற்றங்களையுடையோம்
கம்-பிரமதேவனும்
மால்-திருமாலும்
துதிக்கும்-போற்றுகின்ற
பழனாபுரி-திருப்பழனியில் உள்ள
கோயிலுள்-திருக்கோயிலின் உள்ளே
புக்கு-புகுந்து
ஊறம்-அன்பில்லாதிருக்கின்றோமில்லை (ஆனால்)
கம்-தலையானது
மாறு-ஆட்டுத்தலையாக மாறப்பெற்ற
தக்கன் புரை-தக்கனைப்போன்ற
தீச்சொல்-நிந்தைமொழிகளைக் கூறும்
கொடிது-தீயசெயல்
இலம்-இல்லாதிருக்கின்றோம்
ஏ-று. ஏ-ஈற்றசை. 40

கொடியவ னந்தனைக் குங்கரு ணாகரன், கோதில்குறக்
கொடியவ னந்தனை வேட்டோன் பழனிக் குகன்பொருகாற்
கொடியவ னந்தனை யர்க்கோதுஞ் சீர்த்திக் குழகன்,ஒலி
கொடியவ னந்தனை யாச்செய தோகையன் கோலம்நன்றே.

கொடிஅவன்-குடைக்கூத்துடைய முருகக்கடவுள்
நந்து-இறந்துபடுகின்ற
அன்னைக்கும்-தாயினும் சிறந்த
கருணாகரன்-பேரன்புடையவன்
கோதில்-குற்றமற்ற
குறக்கொடி-வள்ளிநாயகியின்
யவனந்தனை-இளமையழகினை
வேட்டோன்-விரும்புங்குமரன்
பழனி-பழனியில்வசிக்கும்
குகன்-குகப்பெருமான்
பொரு-போர்செய்யத் தக்க
கால், வலிமையான கால்களையுள்ள
கொடியவன்-சேவற்கொடியினன்
நந்தன்-சங்கினையுடைய திருமால்
ஐயர்க்கு-தேவர்களுக்கு
ஓதும்-கூறித்தேற்றிய
சீர்த்தி-அருட்பெருமையுடைய
குழகன்-அழகுத்தெய்வமானவன்
ஒலிகொடு-கூவும் ஓசையால்
இய-கல்வியில் மேம்பட்ட
அனந்தன்-ஆதிசேடன்
நையாச்செய்-அச்சப்படச்செய்யும்
அ-அழகிய
தோகையன்-மயில்வாகப்பெருமானது
கோலம்-திருவுருப்பொலிவு
நன்று-தியானிக்கமிகவும் ஏற்றது
ஏ-று. ஏ-அசை. 41

கோலமன னந்தம் விளைத்தான் பழனிக் குவட்டின்மிசை
கோலம னந்தம் புனைவான், அவனைக் குளிர்மனத்தாற்
கோலம னந்தம் பதஞ்சூட்டி யாளக்கைக் கொண்டுளதோர்
கோலம னந்தம் பகைஞரேல் லோரையும் கொல்லவென்றே.

*கோல-மலர் அம்புகளையுடைய*
*மன்-மன்மதனை விட*
*நந்து-வளர்ச்சிபெற்ற*
*அம்-பேரழகினை*
*விளைத்தான்-அமையப்பெற்றவன்*
*பழனி-பழனிப்பதியின்*
*குவட்டின்மிசை-மலைமீது*
*கோலம்-திருவுருவக்காட்சி*
*அனந்தம்-பலவகையில்*
*புனைவான்-கொண்டுவிளங்கு[பவன்*
*அவனை-அப்பெருமானை*
*குளிர்மனத்தால்-ஒருமைமனத்துடன்*

*கோல-நமது உள்ளத்திற் கொள்[வதற்காக*
*மன்-நிலைபெற்ற*
*அந்தம்-அழகுடைய*
*பதம் சூட்டி-திருவடிகளை அமைத்து*
*ஆள-ஆண்டருளவும்*
*கை-வலக்கையிடத்து*
*கொண்டுள-பற்றியிருக்கும்*
*ஓர்கோல்-ஒப்பற்ற தண்டாயுதம்*
*அமல்-செறிந்துள்ள*
*நந்தம்-நம்மைச்சூழ்ந்த*
*பகைஞர்-பகைவராவார்*
*எல்லோரையும்-பலரையும்*
*கொல்லஎன்றே-அழித்தற்காகவுமேயாம்.*
*ஏ-அ.*

42

கோல்லா விரதம் பயக்குந் தசையதேன் ? கோரருக்கும்
சொல்லா விரதம் புகட்டநட் டேற்கருட் கோற்றம்நல்காய்
கோல்லா விரதம்பின் எய்தல்பொய் யோ,நலங் கூர்பழனிக்
கோல்லா விரதம் பலநா ளுகைக்குங் குருபரனே.

*கொல்-கொல்லப்பட்ட*
*ஆவி-உயிரின் உடலானது*
*ரதம்பயக்கும்-சுவையூட்டும்*
*தசையது-ஊனுடையது*
*என்-என்றுகூறும்*
*கோரருக்கும்-கொடியவர்க்கும்*
*கொல்லா-ஒருஉயிரைக்கொல்[லாத*
*விரதம்-நன்னெறியினை*
*புகட்ட-கூறித்திருத்த*
*நட்டேற்கு-விரும்புமெனக்கு*
*அருட்கொற்றம்-அதற்கான அருளை*
*நல்காய் } கொடுத்தாள*
*கோல் } மாட்டாயோ ?*

*ஆவி-வெப்பமான(கொடியசூர[னை)*
*ரதம்-மாமரத்தை*
*பின்-சூரனுடைச் செய்தபோரில்*
*எய்தல்-வேலாற்கொன்றது*
*பொய்யோ-ஆண்மையல்லவோ*
*நலங்கூர்-நன்மைமிகுந்த*
*பழனிக்கு-பழனிப்பதியினிடம்*
*ஒல்லா-பொருந்தியவனே !*
*இரதம்-அழகிய பொற்றேரினை*
*பலநாள்-பலதடவை*
*உகைக்கும்-நடத்துகின்ற*
*குருபரனே-குருநாதனே*
*ஏ-அ. பழனிக்கு-வேற்றுமை மயக்கம்*
*நான்கை-ஏழாவதாகக்கொள்க*

43

குருத்தத் துவத்தன், பழனிக் குகேசன், கொழுஞ்சிவத்தின்
குருத்தத்து வன்னப் பெருமான் சகாயம் குறிக்கொண்டுளோர்க்
குருத்தத் துவந்தணு காதெண்ணம் யாவுங்கை கூடும்அம்பொற்
குருத்தத் துவர்புகழ் சித்தாடி வீட்டிற் குறுகுநரே.

குரு-எம்மதமும்போற்றும் குரு
தத்துவத்தன்-உண்மைப் வும்
பரமுமானவன்
பழனி-பழனியம்பதிக் கிறைவ
குகேசன்-குகக்கடவுள் [ளுன
கொழும்-செழுமையான
சிவத்தின்-சிவப்பிரானது
குருத்து-குமாரனுகியவன்,
அத்து-சிவப்பான
வன்ன-அழகிய திருமேனியுற்று
பெருமான்-பெருகியமாட்சியினன்
சகாயம்-அவன் உதவியை
குறி-இலட்சியமாக
கொண்டுளார்க்கு-உடைய
அன்பர்கட்கு
உரு-உடலிடத்து
தத்து-எவ்விடையூறும்
வந்தணுகாது-சேராது
எண்ணம்-நினைப்பவை
யாவும்-எல்லாமும்
கைகூடும்-உடனேநிறைவேறும்
அம்-அழகிய
பொன்-பொன்போன்று
குரு-குருவாவரும் தன்மையுற்ற
தத்துவர்-அருட்குணமுடையோர்
புகழ்-பாராட்டும்படியான
சித்து ஆடி-திருவிளையாட்டியற்றி
வீட்டில்-முத்திவீட்டுள்
குறுகுநர்-சேரப்பெறுவார்கள்
எ-று. ஏ-அசை. 44

குறுக்காத டம்ப முருகா! குறவர் குறிச்சியில் வை
குறுக்காத டம்பழ னிக்குன்று ளாய்! தொனிக் குஞ்சிமணிக்
குறுக்கா! தடம்பழிக் கஞ்சாத நெஞ்சைக் கொடுஞ்சமன்மிக்
குறுக்கா தடம்பண்ணி டாதினி தாண்டுசொல் குன்னமொன்றே.

குறுக்காத-குறைவுபடாத
டம்ப-பெருமையுள்ள
முருகா-முருகப்பெருமானே!
குறவர்-வேடரது
குறிச்சியில்-சேரியில்
வைகு-வள்ளிக்காகத்தங்கிய
ருக்கா-வேதப் பொருளானவனே
தடம்-விரிவான
பழனிக்குன்று-பழனிமலையை
உள்ளாய்-சொந்தமாயுள்ளவனே!
தொனி-சலங்கையணிந்த
குஞ்சிமணி-சலங்கையணிந்த
குறுக்கா-இடையையுடையானே!
தடம்-மலைபோன்றுவரும்
பழிக்கு-நிந்தைக்கு
அஞ்சாத-பயப்படாத
நெஞ்சை-என்மனத்தை
கொடும்சமன்-கொடியஎமன்
மிக்கு-மிகவும்
உறுக்காது-கோபிக்காமலும்
அடம்-பிடிவாதத்தை
பண்ணிடாது-செய்யாமலும்
இனிது-இனிமையாக
ஆண்டு-என்னையாட்கொண்டு
சொல்-சொல்லியருளவேண்டும்
குன்னம்-இரகசியமான
ஒன்று-ஒருபொருளின் உண்மை
எ-று. ஏ-அசை. [யை
45

குன்னம் பகர வடிவா ! பழனிக் குவட்டினில்வை
குன்னம் பகரவி லார்க்கெளி யாய் அருட் கூறிலர்பால்
குன்னம் பகரஞ் செயத்துணி யெம்,முற்குலவிஒரு
குன்னம் பகர இசைவாய் பலருட் குறையறவே.

குன்னம்-மலைபோன்று
பகர-விசாலமான
வடிவா-திருவுருவுடையவனே
பழனி-பழனிப்பதியின்
குவட்டினில்-மலைமுகட்டில்
வைகு-கோயில் கொண்டுள்ள
உன்-உன்னை
நம்ப-நம்புகின்ற
கரவு-வஞ்சகம்
இலார்க்கு-இல்லாதவருக்கு
எளியாய்-எளியவரே
அருட்கூறு-இரக்கப்பண்பு
இலர்-இல்லாதவரது
பாங்கு-இணக்கத்தை
உன்னம்-எண்ணமாட்டோம்
பகரம்-நட்போடுஉரையாடுவதை
செய-செய்யவும்
துணியேம்-திடங்கொள்ளோம்
முற்குலவி-எதிரில் தோன்றி
ஒரு-ஒப்பற்ற
குன்னம்-ரகசியமானபொருளை
பகர-உபதேசிக்க
இசைவாய்-திருவுளமிசைய
வேண்டும்
பலர்-அன்பர்பலரது
உள்-உள்ளத்திருக்கும்
குறை-குறைபாடுகள்
அற-நீங்கும்பொருட்டு
எ-று. ஏ-அசை. 46

குறையற வாவிர விற்போய்த் திருடுங் கோடியர்அரு
குறையற வானந் தரைநீங்கி டேல்உனைக்கூவும்என்னுட்
குறையற வாவு மயிலில்வந் தாள் ! புனற் கோதை தரும்
குறையற வாணர் களிகூர் பழனிக் குடையினனே.

குறை-வெறுக்கத்தக்க
அல்தவா-இருள்நீங்காத
இரவில்-இராப்பொழுதில்
போய்-பொருளாளர்பாற்சென்று
திருடும்-களவு செய்கின்ற
கொடியர்-தீயோரின்
அருகு-பக்கத்தில்
உறையல்-துணையாக இருக்க
வேண்டாம்
தவ-தவத்திலீடுபட்டுள்ள
ஆனந்தரை-பேரின்புள்ளவரை
நீங்கிடேல்-நீங்கவேண்டாம்
உனை-உம்மைக்காணவேண்டி
கூவும்-பாடிஅழைக்கின்ற
நின்உள்-என்மனத்திலுள்ள
குறைஅற-குறைபாடுநீங்க
வாவும்-தாவிப்பறக்கின்ற
மயிலில்-மயில்மீதேறி
வந்து-காட்சிவழங்கி
ஆள்-ஆட்கொள்ளவேண்டும்
புனல்-தண்ணீர்வடிவான
கோதை-கங்கை
தரும்-வளர்த்துதவிய
குறுஉ-குழந்தைக்கடவுளே
அறவாணர் தருமசீலர்கள்
களிகூர்-கண்டுமகிழ்கின்ற
பழனி-பழனி மலையிற்புரியும்
குடையினனே-குடைக்கூத்துடையவனே
எ-று.
47

குடையாடி யக்கும் இகழ்ந்து பழனிக் குலகிரிமேற்
குடையா டியபதம் வேட்டோர்விண்ணோர்தங் குடிமுழுதும்
குடையா டியற்கையும் ஓர்காற் புணர்வர், குணக்கமில்பாங்
குடையா டியன்ன போதுநோக் கவர்பெருங் கொள்கை யன்றே.

குடை-குடைநிழலில்இருந்து
ஆள்-ஆட்சிபுரிகின்ற
தியக்கும்-பதவிமயக்கத்தையும்
இகழ்ந்து-வெறுத்து,
பழனி-திருப்பழனியாகிய
குலகிரிமேல்-சிறந்தமலைமீது
குடை-குடைஎன்றதிருக்கூத்தை
ஆடிய பதம்-உமது திருவடிகளை
வேட்டோர்-விரும்பியஅன்பர்கள்
விண்ணோர்தம்-தேவர்களது
குடிமுழுதும்-குடும்பம்அனைத்தையும்
குடை-வருத்திய
ஆடு-ஆட்டுக்கடாவை ஆட்கொண்டதுபோன்ற
இயற்கையும்-தன்மையையும்
ஓர்கால்-ஒருசமயத்தில்
புணர்வார்-அடையப்பெறுவார்
குணக்கம்இல்-கோணுதலற்ற
பாங்குஉடை-பண்பமைந்த
ஆடிஅன்ன-கண்ணாடிபோன்ற
போதுநோக்கு-சமரச ஞானம்
அவர்-அந்தஅடியவர்களுடைய
பெருங்கொள்கை-பெரியகருத்தாகும்
அன்றே-அசை 48

கையணி சத்திக் குகவேள், சிவன்புணர் காமர்மென்கொங்
கையணி சத்திருக் கற்பீன்ற பாலன், கவின்பழனிக்
கையணி சத்திரத் தெந்தை கருணைக் கடல்படிந்தாற்
கையணி சத்தின் துயர்யாவுந் தீர்தரும் கண்டுய்மினே.

கை-தனதுகையில்
அணி-அணிந்துள்ள
சத்தி-வேலாயுதமுடைய
குகவேள்-குகப்பெருமான்
சிவன்-சிவபிரானால்
புணர்-அணையப்பெற்ற
காமர்-அழகும்
மென்கொங்கையள்-இளந்தனம்
விச-உண்மையான
திருக்கற்பு-தெய்விகக்கற்பு இவற்றை உடைய உமையவள்
ஈன்ற-தந்தருளப்பெற்ற
பாலன்-குமரக்கடவுள்
கவின்-விளங்குகின்ற
பழனிக்கு-பழனிமலைக்கு
ஐ-அரசனுவான்
அணி-வரிசையான
சத்திரத்து-படைகளைக்கொண்ட
எந்தை-எமது தந்தையானவன்
கருணைக்கடல்-அவனது திருவருட்கடலில்
படிந்தாற்கு-மூழ்கப்பெற்றவர்கட்கு
ஐ-தலைமை
அ(ண்)ணி-பொருந்திய
சத்தின்-அறிவில்ஏற்பட்ட
துயர்யாவும்-துன்பமெல்லாம்
தீர்தரும்-அடியோடகலும்
கண்டு-இதன்உண்மைகண்டு
உய்மின்-நலம்பெறுவீர்களாக
ஏ-ஐ. ஏ-அசை. 49

கண்டவ கண்டக் கலப்பாய ஞானக் களிப்புடையார்
கண்டவ கண்டம் புரைசொற்குறத்தி கணவபெரு
கண்டவ கண்டலர்க் கெய்த்தேன் பழனிக்கனசிலம்பின்
கண்டவ கண்டனர்க் காகாத தாமெய்க் கருணைசெய்யே.

கண்ட-உருவநிலையையும்
அகண்ட-அருவநிலையையும்
கலப்பாய-அருவுருவநிலையையும் உணர்ந்த
ஞான-பேரின்பானுபவத்தின்
களிப்பு-மகிழ்வை
உடையார்-பெற்றமேலோர்களால்
கண்டவ-அறியப்பெற்றவனே
கண்டு-அம்-புரை=கற்கண்டின் இனியசுவைபோன்ற
சொல்-சொற்களைப்பேசும்
குறத்தி-வள்ளிநாயகியின்
கணவ-மணவாளனாகியவனே
பெருகு-மிகப்பெரிய
அண்ட-ஆகாய வடிவமானவனே
வகு-பலவாகப்பிரிக்கப்பட்ட
அண்டலர்க்கு-பகைவர்கட்கு
எய்த்தேன்-இளைத்தேன்
பழனி-பழனியிடத்துள்ள
கன-புகழ்மிக்க
சிலம்பின்கண்-மலையிடத்து
தவ-தவமார்க்கத்தை
கண்டனர்க்கு-நிந்திக்குந்தீயவா கட்கு
ஆகாததாம்-கிடைத்தற்கரிதான
மெய்-உண்மையான
கருணை-திருவருளை
செய்-என்பாற்புரியவேண்டும்
எ-று. ஏ-அசை.

50

கருமங் கடந்தழைத் தார்பதப் பூந்துகட் காதலுற்றும்
கருமங் கடந்த பெரும்பேறம் நல்கிலை காத்தருள்த
கருமங் கடந்தரு வேழமும் ஊர்குக காவியைநி
கருமங் கடந்த புதல்வா பழனியிற் காவலனே.

கருமம்-சரியை-முதலியகடமை யும்
கடம்-நீதியும்
தழைத்தார்-மிகப்பெற்றபெரியோரது
பத-பாதங்களாகிய
பூந்துகள்-பூவிலிருந்து உதிர்ந்தது களை
காதல்-சிரசிலணியும் ஆசை
உற்றும்-மிகப்பெற்றிருந்தும்கூட
கருமம்-முன்னையவினைத்தீதை
கடந்த-தவிரப்பெறுவதான
பெரும்பேறும்-பெரும்பயனையும்
நல்கிலை-இதுவரைதரவில்லை
காத்தருள்-காப்பாற்றியருள வேண்டும்
தகரும்-ஆட்டுக்கடாவையும்
அங்கு-போர்நிகழும்போது
அடர்தரு-எதிர்க்குந்திறமுற்ற
வேழமும்-உயர்ந்த-யானையையும்
ஊர்-வாகனமாகச்செலுத்தும்
குக-குகப்பெருமானே!
காவியை-நீலோற்பலமலரை
நிகரும்-ஒப்பான
அங்கள்-மேனியுள்ள உமையவள்
தந்த-பெற்றளித்த
புதல்வா-மைந்தனே
பழனியில்-பழனியம்பதியின்
காவலனே-காப்பாளனாகிய தெய்வமே
எ-று.

51

காவல ஞதிய லாநல மாதிய காதலிப்பார்
காவல ஞதிய கண்ட பராபரங் கான்பழனிக்
காவல ஞதிய ருள்சேய்என் பார்க்குங் கருணைசெய்வான்
காவல ஞதியர்க் கோர்எம ஞயதேன் காரணமே.

காவலன்-தேவேந்திரன்
ஆதுஇயலா-இழிவடையாமல் காத்த
நலம்ஆதிய-சிறப்புமுதலியவற்றை
காதலிப்பார்-விரும்பிப் போற்றுமன்பர்
காவலன்-பாதுகாவலாயிருப்பவன்
ஆதி-முழுமுதற்பொருளாவான்
அகண்ட-எங்கும்நிறைந்துள்ள
பராபரம்-பரம்பொருள்
கான்-மணமிக்கசோலைசூழ்ந்த
பழனிக்கு-பழனியம் பதியினிடம்
ஆவலன்-விருப்பமாயிருப்பவன்
ஆதிஅருள்-பரசிவன்அளித்த
சேய்-செந்நிறக்கடவுள்
என்பார்க்கும்-எனத் துதிப்பவர்க்கும்
கருணைசெய்வான்-திருவருள் புரிபவன் ஆனல்
கா-காவடிசுமந்துவந்த
வலன்-வலியஇடும்பன்
ஆதியர்க்கு-ஒத்தசிலர்க்கு
ஓர்-ஒப்பற்ற
எமஞயது-எமன்போன்றிருந்தது
என்காரணம்-யாதுகாரணமோ
ஏ-று. ஏ-அசை.
52

காரணி யானை யுடனின்ற சேந்தன், கடற்றுயின்ற
காரணி யானையு ராதாளும் வேற்கைக் கடவுள் எழு
காரணியானையர் சூழ்தர வாழ்தல்செய் கந்தன்முடிக்
காரணி யானைநட் டான்சேய் பழனிநம் காணியன்றே.

காரணி-உமையவள்
யானையுடன்-விநாயகப்பெருமானுடன்
ஈன்ற-பெற்றருளிய
சேந்தன்-முருகக்கடவுள்,
கடல்-திருப்பாற்கடலில்
துயின்ற-யோகநித்திரைபுரியும்
கார்-மேகம்போற்கறுப்பான
அணியான்-அழகியதிருமால்
அயராது-துன்பமடையாமல்
ஆளும்-அருள்புரியும்
வேற்கை-வேலணிந்தகையுள்ள
கடவுள்-முதல்வன்
எழுகார்-ஏழென்றமேகங்களின்
அணியான்-வரிசைக்குத்தலைவனை இந்திரன்
ஐயர்சூழ்தர-தேவர்சூழும்படி
வாழ்தல்செய்-அரசுபுரிந்துவாழச்செய்த
கந்தன்-கந்தப்பெருமான்
முடிக்கு-தன்சிரசில்
ஆர்-ஆத்திமாலையை
அணியான்-அணிந்தவனும்,
ஐ-தலைமையான
நட்டான்-நடனமுடையானுமான சிவனது
சேய்-குமாரனைவன்
பழனி-அவனுடையபழனிப்பதி
நம்-நம்முடைய
காணி-சொந்தமாகும்.
அன்றே-அசை.
53

காணிய ஞனத் தனப்பால் சொரியும் கவுரிகைச்சேய்
காணிய ஞனடி யார்திருக் கூட்டக் கவின்பழனி
காணிய ஞனதற் கேவனே கேன்எனேக் காயில்உய்யாய்
காணிய ஞனவெங் காமன்சி னேகக் கலிப்பயலே.

காணியன் ஆன-கவுணியமரபில் வந்த திருஞானசம்பந்தராகத் தோன்றியவனும் (அவருக்காக)
தனப்பால்-முலைப்பாலை
சொரியும்-பொழிந்தருளிய
கவுரி-உமையம்மையின்
கைச்சேய்-இளைய குமாரனும் ஆன முருகப்பெருமானுக்கு
காணி-சொந்த இடமானதும்
அனன்-அந்த முருகப் பெருமானின்
அடியார்-மெய்யன்பர்களது
திருக்கூட்ட-திருக்கூட்டத்தால்
கவின்-அழகு பெற்றதும் ஆகிய
பழனி-பழனித்தலத்தை, நீ
காண்-காண்பாயாக!
இயல்-இயற்பாடல்களை
நான்-அடியேன்
அதற்கே-அந்தப் பழனித் தலத்திற்கே
வனைகேன்-பாடி வருகின்றேன்
எனை-அத்தகைய என்னை
காயில்-பகைத்தால்
உய்யாய்-பிழைக்கமாட்டாய்
காண்-இதை அறிவாயாக!
இயன் ஆன-பண்பால் ஒத்த
வெங்காமன்-கொடியமன்மதனது
சினேக-நண்பனுயுள்ள
கலிப்பயலே-கலிபுருடனே
எ-று. 54

கலியனஞ் சப்பிறப்(பு) ஏழுந் தவிரக் கரியனத்தார்
கலியனஞ் சஞ்சலம் இன்றிப் புணரக் கருதுகின்றீர்
கலியனஞ் சண்முக வேள்வய லூர்ப்புகழ் கற்றிகல்வோர்
கலியனஞ் சன்ன கவுமாரர்ச் சேர்மின் கருத்திசைந்தே.

கலியன்-கலிபுருடன்
அஞ்ச-பயப்படும்படியும்,
பிறப்பு-பிறப்பாக வருகின்ற
ஏழும்-ஏழுவகையும்
தவிர-நீங்கவும்,
கரியன்-கரியநிறத் திருமால்
நத்து-விரும்புகின்ற
ஆர்கலி-பாற்கடலில் தோன்றிய
அனம்-அன்னமொத்த திருமகளின் அருளை
சஞ்சலம் இன்றி-வருத்தமின்றி
புணர-பொருந்தும்படியும்,
கருதுகின்றீர்-நினைப்பவர்களே!
கலியன்-போர்வீரனுகி
நம்-நம் வணக்கத்துக்குரிய
சண்முக-ஆறுமுகம் உடைய
வேள்-முருகப்பெருமானது
வயலூர்-பழனியம்பதியின்
புகழ்-பெருமைகளை
கற்று-உணர்ந்து
இகல்வோர்-பகைவர்களை
கல்-அகழ்ந்தெறிகின்ற
இயல்-இயல்புடைய
நஞ்சு அன்ன-விடம் போன்ற
கவுமாரர்-முருகன் அடியவர்களை
கருத்து இசைந்து-ஒருமையுடன்
சேர்மின்-சென்றடையுங்கள்
எ-று. ஏ-அசை. 55

கருத்தனை யாண்டதிற் சூர்மாயச் செய்த கடற்பெருந
கருத்தனை யாண்டலைக் கேதனத் தான்றன்னைக் கண்ணிற்றந்த
கருத்தனை யாண்ட குருநாதன் ஆர்வம் கமழ்பழனிக்
கருத்தனை யாண்டண்டர் ஈண்டைப் புலவர்கணத்தண்ணலே.

*கருத்தன்-அன்பர் உள்ளத் திருப்பவன்*
*ஐ-ஐந்தாயுள்ள*
*ஆண்டதில்-வயதுப் பருவத்தில்*
*சூர்-சூரன்*
*மாய-அழியும்படி*
*செய்த-புரிந்ததும்*
*கடல்-கடலோரமாயுள்ளதுமான*
*பெருநகர்-திருச்செந்தூரிற் செய்த*
*உத்தன்-போரினையுடையவன்,*
*ஐ-அழகிய*
*ஆண்டலை-சேவலாயமைந்த*
*கேதனத்தான்-கொடியுள்ளவன்,*
*தன்னை-அப்பெருமானை*
*கண்ணில்-அக்கினிக்கண்ணால்*
*தந்த-தோற்றுவித்தருளிய*
*கருத்தனை-சிவபிரானை*
*ஆண்ட-ஆட்கொண்டருளிய*
*குருநாதன்-பரமகுருவானவன்,*
*ஆர்வம்-பேரன்பு*
*கமழ்-நிறையப் பெற்ற*
*பழனி-பழனித்தலத்துள்ள*
*கருத்தன்-ஒப்பற்ற கடவுள்*
*ஐ-தலைமையான*
*ஆண்டு-வானுலகில் வாழும்*
*அண்டர்-தேவர்கட்கும்*
*ஈண்டை-இவ்வுலகில் உள்ள*
*புலவர்-பாவலர்கள்*
*கணத்து-கூட்டத்துக்கும்*
*அண்ணல்-தலைவனுகும்*
*ஏ-று. ஏ-அசை.* 56

கணக்கா வலாரளி சூழ்கடம் பார்அத்த! கண்புரையும்
கணக்கா வலாள திருவாவினன்குடிக் கந்த! ஒன்னார்
கணக்கா வலார்அனை யாரையும் ஏகதற் கண்டுநொந்தேன்
கணக்கா வலாரி முதலோரு மெச்சும் களிப்பருளே.

*கள்-தேனை*
*நக்கு-உண்ணும்*
*ஆவல்-விருப்பம்*
*ஆர்-பொருந்திய*
*அளி-வண்டுகள்*
*சூழ்-மொய்த்துள்ள*
*கடம்பு-கடப்பம்பூவினாலான*
*ஆரர் அத்த-மாலை புனைந்தவனே*
*கண்புரையும்-கண்போற் சிறந்த*
*கண-அன்பர் கூட்டத்தின்*
*காவலாள-பாதுகாவலனே*
*திருவாவினன்குடி-ஆவினன் குடிக்கோவிலில் உள்ள*
*கந்த-கந்தக்கடவுளே*
*ஒன்னார்கள்-பகைவர்கள்*
*நக்கா-பரிகசித்து*
*வல்லார்-அருளாளரையும்*
*அனையாரையும்-ஒத்தாரையுட்*
*ஏகதல்-நிந்திப்பதை*
*கண்டு-பார்த்து*
*நொந்தேன்-வருந்தினேன்*
*கணக்கா-சரியானபடி*
*வலாரி-இந்திரன்*
*முதலோரும்-முதலிய பலரும்*
*மெச்சும்-போற்றத்தக்க*
*களிப்பு-பேரின்பத்தை*
*அருள்-கொடுத்தருள்வாயாக*
*ஏ-று. ஏ-ஈற்றசை.* 57

களிக்கட லாரனங் கன்பகைத் தீமை கழித்தன் அருட்
களிக்கட லாரணச் சென்னியி னலருள், கண்டத்தினிற்
களிக்கட லாரத் தலையணி வான்மைந்த ! கானவர்ம
களிக்கட லாரத்த வன்ன பழனிக் கழகத்தனே.

கள்-தேன் நிறைந்த மலர் அம்புகளாலும்
இக்கு-கரும்பான வில்லாலும்,
அடு-போர்புரிபவனும்
அல்ஆர்-கருமை நிறமானவனும்
அனங்கன்-மன்மதனின் (ஆகிய)
பகை-விரோதமான
தீமை-கொடுமையை
கழித்து-நீக்கியருளி
உன்-தேவரீரது
அருள்-திருவருளால்
களி-மகிழக்கூடிய
கடல்-இன்ப வெள்ளத்தை
ஆரண-வேதத்தின்
சென்னியினல்-முடிவான உண்மையை
அருள்-கொடுத்தருள்வீராக
கண்டத்தினில்-கழுத்தில்
களி-செறிந்த
கடு-ஆலகால விடத்தின்
அல்-கருப்பினையும்
ஆர-ஆத்திமலரையும்
தலை-சிரத்திலும்
அணிவான்-புனைந்த சிவபிரானது
மைந்த-புதல்வரே
கானவர்-வேடர்களுடைய
மகள்-மகளாகிய வள்ளியை
இக்கு-காதலால் வருந்தச் செய்யும்
அடலா-வலிமையுடையவரே
ரத்த-சிவந்த
வன்ன-நிறமுடையவரே
பழனி-பழனியம்பதியிலுள்ள
கழகத்தனே-திருக்கோயிலையுடையவரே
எ-று. 58

கழகத் தவரையன் றாதரித் தாய்நிற் கருதுமன்பாற்
கழகத் தவரையம் தீர்ப்பாய்! பழனியிற் காட்டும் மெய்ப்பு
கழகத் தவரை யணங்கீன்ற பால! கருணையை இ
கழகத் தவரை யறப்பெருகார்வக் கடலருளே.

கழு-சூலப்படையையும்
அ-கத்து-அந்தப்பிரமகபாலத்தையும்கொண்ட
அவரை-சிவபிரானை
அன்று-முன்னாளில்
ஆதரித்தாய்-ஆண்டருளியவனே
நின்-உன்னை
கருதும்-தியானிக்கின்ற
அன்பால்-அன்புடையவரான
கழகத்தவர்-சங்கப்புலவரது
ஐயம்-(பொருளிலக்கணத்தின்) சந்தேகங்களை
தீர்ப்பாய்-மெய்ப்பாட்டின் மூலம் போக்கியவனே
பழனியில்-பழனியம்பதியில்
காட்டும்-அன்பர்காணச்செய்யும்
மெய்-உண்மையான
புகழ-சிறப்புடையவனே !
கத்த-தலைவனே
வரை-இமயமலையிற்றோன்றிய
அணங்கு-பார்வதியம்மை
ஈன்ற-பெற்றருளிய
பால-குமாரக்கடவுளே
கருணையை-அருட்பண்பை
இகழ்-அவமதித்துப்பேசுகின்ற
அகத்து-ஆணவமுடைய
அவரை-கொடியவரை
அற-அழிக்கத்தக்கவாறு
பெருகு-மிகுதிப்படும்
ஆர்வ-அருளாசையை
கடல்-கடல்போல
அருள்-தந்தருளவேண்டும்
எ-று. ஏ-அசை 59

**கடலைய ருந்திய மாமுனி தேசிகன், கண்டத்துற்ற**
**கடலைய ருந்திய சீர்க்கான சேய், கருங் கட்குறம**
**கடலைய ருந்தியக் குற்ருன், பழனியைக் காதலியார்**
**கடலைய ருந்திய கான்வேடர் தம்மிற் கடையவரே.**

*கடலை-சமுத்திரநீர்முழுதையும்*
*அருந்திய-உண்டவரான*
*மாமுனி-அகத்தியருக்கு*
*தேசிகன்-குருவானவன்,*
*கண்டத்து-கழுத்திடம்*
*உற்ற-நிலையாகத்தங்கிய*
*கடு-ஆலகாலவிடத்தாலான*
*அல்-இருட்டின்சிறப்புடைய*
*ஐயர்-தலைவனுனசிவபிரானது*
*உந்திய-மேலான*
*சீர்க்கு-சிறப்பியல்புக்கு*
*ஆன-பொருந்திய*
*சேய்-முருகக்கடவுள்*
*கரும்-மையூட்டிக்கறுப்பான*
*கண்-கண்களையுடைய*
*குறமகள்-வள்ளிநாயகியின்*
*தலை-இளமங்கைப்பருவத்தின்*
*அரும்-இனிமையான*
*தியக்கு-மோகத்தை*
*உற்ருன்-பெற்றமுருகனது*
*பழனியை-பழனித்தலத்தை*
*காதலியார்-விரும்பிவணங்காதவர்*
*கள்-மதுவை*
*தலை-முதன்மையாக*
*அருந்திய-உண்பவர்களாய்*
*கான்-காட்டில்வசிக்கின்ற*
*வேடர்-வேடர்களான*
*தம்மில்-அவர்களைவிட*
*கடையவர்-கீழ்ப்பட்டவ*
*ஏ-று. ஏ-அசை. ராவார்கள்*

60

**கடையத் தகுந்த அமுதன்ன சொல்லியர் காதல்விஞ்சிக்**
**கடையத்த குந்தனப் பூண்கொண் டுழல்பவர்க் காணவிடேல்**
**கடையத் தகுந்தரன் ஞர்க்கரி யாய்/கொலைக் காதகரைக்**
**கடையத் தகுந்த முருகா பழனிக் கவின்கந்தனே.**

*கடையத்தகுந்த-மத்தினல் கடை யத்தெடுத்த*
*அமுதஅன்ன-அமுதம்போன்ற*
*சொல்லியர்-இன்சொல் மாதர்க ளது*
*காதல்-மோகம்*
*விஞ்சி-அதிகப்பட்டு*
*கடை-அவர்கள்வீட்டுவாயிலில்*
*அத்த-பொருளையும்*
*குந்தன-ரத்தினக்கல்பதித்த*
*பூண்-பணியையும்கொடுத்து*
*கொண்டு-இன்பம் நுகர்ந்து*
*உழல்பவர்-அலையும் செல்வரிடம்*
*காண-பொருள்பெறக்காணும்படி*
*விடேல்-என்னைவிடவேண்டாம்*
*கடு-விடம்ஒப்பவரும்*
*ஐயத்த-அம்மணகோலம் உடைய*
*குந்தர்-குண்டர்களுமாகியசமணர்*
*அன்னார்க்கு-அவர்போலும் புறச் சமயத்தினர்கட்கும்*
*அரியா-அறியமுடியாதவரே*
*கொலை-கொலைபுரியும்*
*காதகரை-கொடியோர்களை*
*கடை-தாக்குகின்றதாய்*
*அத்த-கையில் ஏந்தியதாயுள்ள*
*குந்த-வேற்படையணிந்த*
*முருகா-முருகப்பெருமானே*
*பழனி-பழனியில் உள்ள*
*கவின்-அழகுமிக்க*
*கந்தனே-கந்தக்கடவுளே*
*ஏ-று.*

61

**கவிநயங் கண்ட புலவோர்க் கெளியன் கனலும் வெட்கும்**
**கவிநயங் கண்டர் சிறைமீட்ட சேவகன், கார்மலிவாற்**
**கவிநயங் கண்ட பழனிப்பெருங்கிரிக் காவலன்மிக்**
**கவிநயங் கண்டலை யிற்பதம் சூடும் கனவினிதே.**

*கவிநயம்-பாடலின் சிறப்பினை*
*கண்ட-கண்டறிந்தவரான*
*புலவோர்க்கு-புரவலர்கட்கு*
*எளியன்-எளிமையானவன்*
*கனலும்-நெருப்பும்*
*வெட்கும்-கண்டுநாணும்படி*
*கவின்-செந்நிறஅழகுடைய*
*ஐ-தலைவன்*
*அங்கு-சூரனைக்கொன்ற அன்று*
*அண்டர்-தேவர்களது*
*சிறை-தளையைவிட்டு*
*மீட்ட-திரும்பிவரும்படி செய்த*
*சேவகன்-வீரமுடையவன்*
*கார்-மேகங்களின்*
*மலிவால்-மிகுதியால்*
*கவி-குரங்குகள்*
*நை-மழையால் வருந்துகின்ற*
*அங்கு-அவ்விடத்தில்*
*அண்ட-ஒதுங்கியிருப்பதும்*
*பழனி-பழனியில் உள்ளதுமான*
*பெருங்கிரி-பெரியமலையினது*
*காவலன்-தலைமைக்கடவுள்*
*மிக்க-மேலான(தனது)*
*விநயம்-அருளுடன்*
*கண்-என்கண்களிலும்*
*தலையில்-சிரத்திலும்*
*பதம்-திருவடிகளை*
*சூடும்-அணியப்பெறக்கண்ட*
*கனவு-கனக்காட்சியானது*
*இனிது-மிகமேலாகும்*
*ஏ-று. ஏ-அசை.* 62

**கனகவித் தாரணி சேய்பழ னுபுரிக் காதலன்பர்**
**கனகவித் தாரமும், கார்கடல் சூழ்பெருங் காசினியும்**
**கனகவித் தாரகை யன்னமுத் தாரம் களபமிட்டுக்**
**கனகவித் தாரமிக் குங்கொங்கை மாதரும் கைப்பவரே.**

*கன-சொற்பொருட் சிறப்புற்ற*
*கவி-பாடல்களால் ஆகிய*
*தார்-பாமாலைகளை*
*அணி-ஏற்றருள்கின்ற*
*சேய்-முருகப்பெருமான்*
*பழனுபுரி-பழனியின் மீது*
*காதல்-அன்புகொண்டுள்ள*
*அன்பர்-அடியவர்*
*கனக-பொன்னின் ஆசை*
*வித்தாரமும்-மிகுதியும்*
*கார்-கரியநிறமுடைய*
*கடல்-சமுத்திரத்தால்*
*சூழ்-சூழப்பட்ட*
*பெரும்-பெரிய*
*காசினியும்-உலக(மண்ணாசையையும்)*
*கன-புகழ்ச்சி மிக்க*
*கவித்தாரகை-சக்கிர நட்சத்திரம் போல்*
*அன்ன-ஒளிவிடுகின்ற*
*முத்தாரம்-முத்துப் பணிகளையும்*
*களபம்-வாசனைச்சாந்தையும்*
*இட்டு-அணிந்து*
*க(ன்)ன-கன்றும்படி*
*கவித்து-கைகளால் குவித்து*
*ஆ-வியக்கும்படி பற்றி*
*ரமிக்கும்-இன்புறுகின்ற*
*கொங்கை-தனங்களையுடைய*
*மாதரும்-பெண்களின் ஆசையையும்*
*கைப்பவரே-வெறுப்பவரேயாம்*
*ஏ-று. ஏ-அசை.* 63

கைப்பகட் டானையம் காட்டும் கணிகையர்க் கண்டுருகாக்
கைப்பகட் டானை வுருத்தவ மாதிய காமர்துதிக்
கைப்பகட் டானைக் கிளையாற் பழனியிற் கண்டுவன்ப
கைப்பகட் டானையட் டான்பெற்ற தாரகம் கற்றவர்க்கே.

கை-கரங்களிற் காட்டுகின்ற
பகட்டால்-அபிநயத்தால்
நயம்-கருத்தினை விளக்கி
காட்டும்--காணப்புரிகின்ற
கணிகையர்-விலைமாதர்களை
கண்டு-பார்த்து
உருகா-மனம் கலங்காத
கைப்பு-வைராகமும்
அகட்டால்-வயிற்றுணவுக்காக
நைவுறு-மனம் வருந்தாத
தவம்-தவமுயற்சி
ஆதிய-முதலியவையும் (எவர்க்கு
காமர்-அழகிய எய்துமென்றால்)
துதிக்கை-தும்பிக்கையுடைய
பகட்டு ஆனைக்கு-யானைமுகம்
உடையகணபதிக்கு
இளையான்-துணைவனான முருகப்
பெருமானுடைய
பழனியில்-பழனியம்பதியில்
கண்டு-சென்று தெரிசித்து
வன்-வலிமைமிக்க
பகை-விரோதியான
பகட்டானை-எருமைவாகன
முள்ள எமனை
அட்டான்-உதைத்த
சிவபிரானுக்கு
பெற்ற-உபதேசிக்கப்பெற்ற
தாரகம்-பிரணவப்பொருளை
கற்றவர்க்கே-உணர்ந்தபெரி
யோர்கட்கேயாம்.
எ-று. 64

கற்றன மங்கையர்க் கன்பரைச் சில்புன் கவிஞர் சொல்பாக்
கற்றன மங்கையில் ஏற்றுண்கி லேம்,தவம் காதலித்தேங்
கற்றன, மங்கை அடைகின்றி லேம்.சிவன் கண்ணருள்ம
கற்றன மங்கையம் சேர்வய வூரினிற் காணலேன்றே.

கல்-மலைகளைப்போன்ற
தன-தனங்களையுடைய
மங்கையர்க்கு-மாதர்களிடம்
அன்பரை-விருப்பமுள்ளவர்களை
சில்-சில
புன்கவிஞர்-இழிந்தபுலவர்கள்
சொல்-பாடிவைத்த
பா-கவிதைகளை
கற்றனர்-படித்துள்ளோம்
அங்கையில்-உள்ளங்கைகளால்
ஏற்று-யாசித்து
உண்கிலேம்-உண்டோமில்லை
தவம்-தவநிலையை
காதலித்து-பெறவிரும்பி
ஏங்கு-ஏக்கமடைவதை
அற்றனம்-நீங்கியுள்ளோம்
அங்கு-தவநிலைக்கும்படியாக
ஐ-குருநாதரை
அடைகின்றிலேம்-தஞ்சமுற்றே
மில்லை
சிவன்-சிவபிரான்
கண்-நெற்றிவிழியால்
அருள்-அருளிய
மகன்-குமாரனான முருகக்
கடவுளை
தவமங்கை-இலக்குமியின்
அம்சேர்-அழகுசேரப்பெற்ற
வயவூரினில்-பழனித்தலத்தில்
காணல்-கண்டு போற்றுவது
என்றே-எக்காலமோ
எ-று. 65

காணலங் காரக் கடம்பன் பழனிக் கடவுள்முதிர்
காணலங் காரப் பணியான் மருகன், கலைகவர்தக்
காணலங் காரமப முற்ருள் மெய் காய்ந்து களைக்கும், இனிக்
காணலங் காரம் கோடுவரப் போதிசெங் காலன்னமே.

காண்-காண்பதற்குரியதும்
அலங்கு-அசைகின்றதும் ஆன
ஆர-மாலைகளாக அணிந்த
கடம்பன் கடம்பினையுடையவன்
பழனிப் பழனியின்கண் உள்ள
கடவுள்-முதன்மைக்கடவுள்
முதிர்-மிகுதியாக
காண் காணப்படுகின்ற
அலங்கார-அழகினையுடைய
பணியான்-பூண்களைப் பூண்ட திருமாலின்
மருகன்-மருகனானவன்
கலை-உடுத்திய உடை
கவர்-சோருகின்ற
தக்காள்-பருவமுற்ற தலைவி
நலங்கு-காமவேட்கையால் வருந்துகின்ற
ஆரம்பம்-தொடக்கமில்லை
உற்ருள்-அடைந்திருக்கின்ருள்
மெய்-உடலானது
காய்ந்து-மெலிவுற்று
களைக்கும்-தளர்வுறுவாள்
இனி-இனிமேல்தான்
காண் காணக்கூடிய
அல்-இராப்பொழுது வரவுள்ளது
அங்கு-முருகன் இருக்குமிடம் சென்று
ஆரம்-அவனணிந்த மாலையை
கொடுவர-பெற்றுவருமாறு
போதி-சொல்வாயாக
செம்-செந்நிறமான
கால்-கால்களையுடைய
அன்னமே-அன்னப்பறவையே.
எ-று. 66

காலச காயம் குறித்தேங்கும் என்னைக் கலங்கவிட்டாய்
காலச காயமும் எய்தச்செய் யேல், போதக் கண்நடஞ்செய்
காலச காயக்கன் ஏத்தும் பழனியிற் கந்த, அங்கி
காலச காயம் உகைப்பாய்/முற் ஞேன்றுபு காத்தருளே.

காலசகாயம்-நல்லநேரம்
குறித்து-வருவதைக் கருதி
ஏங்கும்-ஏக்கமடைகின்ற
என்னை-அடியேனை
கலங்க-மருந்தும்படி
விட்டாய்-ஆளாமலிருந்தாய்
கால் ஏற்படுகின்ற
அச-இகழ்ச்சியையுடைய
காயம்-வேறொரு பிறப்பை
எய்த-யான் பெறும்படி
செய்யேல்-பிறப்பிக்கவேண்டாம்
பொதக்கண்-திருஅம்பலத்தில்
நடஞ்செய்-கூத்தாடுகின்றவரும்
கால்-தென்றலைத் தேராகவுடைய
அச-மன்மதனை
காய்-எரித்தருளிய
அக்கண்-நெற்றிக்கண்ணினையுடைய சிவன்
ஏத்தும் போற்றுகின்ற
பழனியில்-பழனியில் உள்ள
கந்த-கந்தப்பெருமானே
அங்கி-வெள்ளித்தீ
கால்-தோற்றுவித்த
அசகாயம்-ஆட்டுக்கடா மீதேறி
உகைப்பாய்-செலுத்தியவரே
முன்-என் எதிரே
தோன்றுபு-காட்சிதந்து
காத்தருள்-ஆண்டருள வேண்டும்
எ-று. ஏ-அசை. 67

காத்தக ரத்தகு வர்ச்சேகுத் தாய்/குறக் கன்னிகைசங்
காத்தக ரத்தழல் உண்டான் புதல்வ/ ககனமுனிக்
காத்தக ரத்தரு ணத்துகைத் தாய்/புனல காலவயலூர்க்
காத்தக ரத்தண் ணலே/என்னை ஆண்டுட் கலந்தருளே.

கா–கற்பகநாட்டை
தகர்–நொறுக்கிய
அ–அத்தகைக் கொடிய
தகுவர்–அசுரர்களை
செகுத்தாய்–அழித்தவரே!
குற–வேடமகளான
கன்னிகை–வள்ளிநாயகியிடம்
சங்காத்த–நேயமிக்கவரே
கர–ஆலகாலவிடமான
தழல்–நெருப்பை
உண்டான்–உண்ட சிவபிரானது
புதல்வ–திருக்குமாரரே
ககன–வான்வழிசெல்லும்
முனிக்கா–நாரதர் விருப்பப்படி
தகர்–வேள்வியில்வந்த ஆட்டினை
அத்தருணத்து–அந்தநேரத்தில்
உகைத்தாய்–செலுத்தியவரே
புனல்–நீர்நிறைந்த
கால்–வாய்க்கால் மிகுதியான
வயலூர்–பழனியம் பதியை
காத்த–பாதுகாக்கின்ற
கரத்து–திருக்கைகளையுடைய
அண்ணலே தலைமைக்கடவுளே
என்னை–அடியேனை
ஆண்டு–ஏற்றருளி
உள்–என் மனத்தில்
கலந்து–பிரிவின்றி நிலைத்து
அருள்–அருள் புரியவேண்டும்
எ–று. ஏ–அசை. 68

கலந்த மனத்தச் சலியேம், பகட்டிற் கனன்றெழும்இ
கலந்த மனத்தக் கயிறஞ்சி னேம்,வந்து காவயலூர்க்
கலந்த மனத்தன் மருகா/பொருவில் கருணைவெள்ளம்
கலந்த மனத்தர்கண் காணுறச் சூழ்பிர காசத்தனே.

கல்–கற்கப்படுவதாவது
அந்த–உன்வீரச்செயல்களான
மல்–போர்க்கதைகளேயாம்
நத்த–அதைவிரும்பிக்கற்பதில்
சலியேம்–சோர்வடையோம்
பகட்டில்–எருமைக்கடாவில்ஏறி
கனன்று–கோபாவேசத்துடன்
எழும்–உயிரைக்கவரவரும்
இகல்–பகைவனது
அந்த–வாழ்வினை முடிக்கும்
மன்–எமனுடைய
அத்த–கையிற்கொண்ட
கயிறு–பாசக்கயிற்றுக்கு
அஞ்சினேம்–மிகவும்பயந்தோம்
வந்து–எமதுமுன்தோன்றி
கா–காத்தருள்வீராக!
வயலூர்–பழனியில்உள்ள
கல்–மலையிற்கோயில்கொண்ட
அந்த–அழகுத்தெய்வமே
மன்–பொருந்திய
நத்தன்–சங்கணிந்தமாயனது
மருகா–மருகரானகடவுளே
பொருவில்–இணைபற்ற
கருணை–இரக்கப்பண்பு
வெள்ளம்–மிகுதியாக
கலந்த–அமையப்பெற்ற
மனத்தர்–உள்ளமுற்ற அன்பர்
கண்–கண்கள்
காணுற–நேர்முகமாகக்காணுமாறு
சூழ்–நிறைந்துவிளங்கும்
பிரகாசத்தனே–ஒளிமயமானவரே
எ–று. 69

சத்தங்க டத்தமிற் போராட நின்று தழைத்தபெரும்
சத்தங்க டத்தர் அநுபூதிச் செல்வம், தனிப்பிரகா
சத்தங்க டத்தறச் சாடும் சகாயம் தணக்கரும்நி
சத்தங்க டத்தரும் போற்றப் பழனித் தலத்துள்ளதே.

சத்தங்கள்-பேரொலியுடையதாக (ஒவ்வொருசமயங்களும்)
தத்தமில்-தங்களுக்குள்ளாத
போராட-பெரிதென்றுமுழங்கி வாதமிடவும்,
நின்று-அவற்றுக்கெல்லாம்பொதுவாக நின்றும்
தழைத்த-மேற்பட்டுள்ளபொருளாயுமுள்ள
பெரும்-பெரிய
சத்து-பரம்பொருள் ஆனது,
அம்-அழகிய தவச்சின்னமுடைய
கடத்தர்-திருமேனியுள்ள பெரியோரது
அநுபூதி-அனுபவத்திற்கானும்
செல்வம்-திருவருட்பேறுகியும்,
தனி-ஒப்பற்ற
பிரகாச-ஒளிமயமாகியும்,
தங்கள்-வழிபடும் அன்பர்களது
தத்து-பிறப்புஇறப்பானஆபத்து
அற-இல்லாதொழியும்படி
சாடும்-செய்கின்ற
சகாயம்-பெருந்துணையாகியும்,
தணக்கஅரும்:கைவிடமுடியாத
நிசத்து-உண்மைப்பொருளாயும்,
அம்-ஆலகாலமாகியஅந்த
கடு-விடத்தையுண்டவரான
அத்தரும்-பரமசிவனும்
போற்ற-வணங்கும் குருநாதனை
பழனித்தலத்து-பழனியம்பதியில்
உள்ளது-நிலைத்துவிளங்குகின்றது
எ-று. ஏ-ஈற்றசை.
அகண்டபரமேகுருவடிவாகியது என்பதாம் 70

தலம்பல, வேட மனந்தம், பழனி தனிலமர்கா
தலம்பல வேட்கையும் அங்ஙன மாகும், தனித்தேனுள்ளோ
தலம்பல வேதனை தாமும் அனேகம், தழல்விழிநு
தலம்பல வேதியன் செய்தவ மாங்குகன் சம்பந்தமே.

தலம்-முருகன் திருத்தலங்கள்
பல-பற்பலவாகும்
வேடம்-அவனது திருக்கோலமும்
அனந்தம்-மிகப்பலவாகும்
பழனிதனில்-பழனியம்பதியில்
அமர்-தங்கியிருப்பதில்
காதலம்-விருப்பமுடையேம்
பல-பயன்பெறக்கருதும்
வேட்கையும்-ஆசையும்
அங்ஙனமாகும்-அப்படியேயாம்
தனித்து-ஒடுங்கியவீட்டிடையில்
என்-என்னுடைய
உள்-மனத்துள்விளங்கி
ஓதல்-கூறியதான
அம்பல்-பழிமொழிகளால் வந்த
அ-அவ்வித
வேதனை தாமும்-துன்பமும்
அனேகம்-அதிகமாகும். இவை
தழல்விழி-நெருப்புக்கண்ணை
நுதல்-நெற்றியிற்கொண்டு
அம்பல-பொற்சபையிலுள்ள
வேதியன்-சிவபிரான்
செய்-புரிந்தருளிய
தவமாம்-தவப்பயனான
குகன்-முருகப்பெருமான்
சம்பந்தமே-சம்மதமேயாம்
எ-று. 71

சம்பவ மானவிர் பாகத்தில் வாழ்குயில் தன்வயிற்றிற்
சம்பவ மானவ! தண்வய லூரக்குக! சாற்றென் சொல்நிச
சம்பவ மானவர் கூடி நகலிற் றயங்கிமுகஞ்
சம்பவ மானமுற் றேனைய கோஎனைத் தாங்குதியே.

சம்பு-சிவபிரானால்
அவ-தோற்கடிக்கப்பட்ட
மான்-தாருகாவனமுனிவரேவிய மானை
அவிர்-இடக்கையிற்கொண்டுள்ள
பாகத்தில்-ஒருபாதியில்
வாழ்-விளங்குகின்ற
குயில்தன்-உமையவளது
வயிற்றில்-வயிற்றினிடமாக
சம்பவம்-அவதாரத்தை
ஆனவ-அடையப்பெற்றவனே!
தண்-குளிர்ந்தநீர்வளமிக்க
வயலூர்-பழனியில்விளங்கும்
குக-குகக்கடவுளே
சாற்று-சொல்லுகின்ற
என்-என்னுடைய
சொல்-சொல்லானபாடல்
நிசம்-உண்மையாகும்
பவ-பாவசம்பந்தப்பட்ட
மானவர்-மனிதர்சிலர்
கூடி-ஒன்று சேர்ந்து
நகலின்-பரிகசிப்பதால்
தயங்கி-சோர்வடைந்து
முகம்-முகமானது
சம்பு-வாடுமளவு
அவமானம்-மானமிழந்து
உற்றேன்-இருக்கின்றேன்
ஐயகோ-அந்தோ
எனை-அடியேனை
தாங்குதி-ஆதரித்தருள்க!
ஏ-று. ஏ-அசை
72

தாங்குதி ரைக்கட லைக்கொண்டு விட்டவன் தன்னொடுள்ளீர்
தாங்குதி ரைக்கட லைப்போனல் காரையும் சார்ந்திரந்தேய்த்
தாங்குதி ரைக்கட லைப்பநோந் தேம்விண் டனைக்கடந்தும்
தாங்குதி ரைக்கட லைப்பழ னிக்கட் டரலளித்தே.

தாங்கு-என்னை ஏற்றருள்க?
திரை-அலைகளையுடைய
கடலை-கடல்நீரை
கொண்டு-உட்கொண்டு
விட்டவன்-வெளிப்படுத்திய அகத்தியர்
தன்னொடு-உடன்கூட்டி
உள்-தன்வீட்டினுள்
ஈர்த்து-வரச்செய்து பின்
ஆங்கு-அவ்விடத்தில்
திரை-அளவிற்சுருங்கிய
கடலை-சிறியகடலையளவு
பொன்-பொருளையும்கூட
நல்காரையும்-தராதலோபியரிடத்தும்
சார்ந்து-அடைந்து
இரந்து-யாசித்து
எய்த்தாம்-மனம் வருந்தினோம்
கு-சிந்தையும்,
திரை-கடலில் தோன்றிய
கடு-விடம்போன்றதுன்பமும்
அலைப்ப-வருத்த
நொந்தேம்-வேதனைப்பட்டோம்
விண் தனை-ஆகாயவெளியை
கடந்தும்-தாண்டியும்
தாம்-தாவிச்செல்கின்ற
குதிரைக்கு-மயிலுக்கேற்ற
அடல்-வலிமையுற்ற
ஐ-தலைவனே!
பழனிக்கண்-பழனிப்பதியில்
தரல்-எனக்கருள்வதை
அளித்து-கொடுத்து,
(தாங்கு எனக்கூட்டுக)
ஏ-று. ஏ-அசை 73

தாக்காதி விட்டய மாதிகொல் பாதகர் தந்திரன்மாய்
தாக்காதி விட்டங்கு கின்றோர் புலையுந் தணப்பநல்காய்
தாக்காதி விட்டத் தனிவிட்டெந் தாய்துதித் தார்தமதா
தாக்காதி விட்டறை சீர்ப்பழ னாபுரிச் சண்முகனே.

தாக்கு-புலி
ஆதி-முதலிய கொடு விலங்குகளை
விட்டு-கொல்வதை நிறுத்தி
அயம்-ஆடு
ஆதி-கோழி முதலிய எளிய உயிரை
கொல்-கொன்றுண்கின்ற
பாதகர்-பாவிகள்
தந்திரன்-தமது அடாச் செயல்
மாய்தர-ஒழியும்படி
காதி-அழித்து-மேலும்
விண்-வானுலகில்
தங்குகின்றோர்-வாழும் தேவர்கள்
புலையும்-ஊனுண் உண்பதையும்
தணப்ப-தடுக்கும்படி
நல்காய்-அருளைத் தரவேண்டும்
தரு-மரத்தில் உண்டாகின்ற
அக்கு-உருத்திராக்கம் பூண்ட
ஆதி-முதல்வனே!
இட்ட-விருப்பத்தக்க
தனி-ஒப்பற்ற
விட்டு-முத்திவீட்டின்
எந்தாய்-எமது தந்தையே
துதித்தார்-தோத்தரிப்பவர்
தமது-தங்கட்கெல்லாம்
ஆதர-உதவியானவனே!
கா-கற்பக நாட்டின்பமும்
திவிட்டு-தெவிட்டும்படி
அறை-சொல்கின்ற
சீர்-சிறப்புமிக்க
பழனாபுரி-பழனியில் வாழும்
சண்முகனே-ஆறுமுகப்பரனே
எ-று. 74

சண்மத வாணவத் தோரர சாள்கை சகிக்கின்றிலேன்
சண்மத வாணகை யார்மூலைப் போகத் தறிக்கட்டுண்டேன்
சண்மத வாணருங் கொண்டாடும் பேறு தகுதிபவுஞ்
சண்மத வாணல னன்னோர் பழனி தனக்கரசே.

சள்-இகழ்ச்சிக்கிடமான
மத-இறுமாப்புடன்
ஆணவத்தோர்-அகங்காரமிக்க
அரசாள்கை-ஆட்சிபுரிவதை வர்
சகிக்கின்றலேன்-மனமிசை
சண்-செய்கின்ற கிலேன்
மத-மாடமிக்க
வாள்-வெள்ளை நிறமான
நகையார்-பற்களையுடைய மாதரது
மூலைப்போக-காம இச்சையான
தறி-போகத்தளையில்
கட்டுண்டேன்-சிக்கியுள்ளேன் (அத்தகைய எனக்கு)
சண்மத-ஆறு சமயத்தில்
வாணரும்-வாழ்பவரெல்லாம்
கொண்டாடும்-பாராட்டத்தக்க
பேறு-திருவருட் பேற்றினை
தகுதி-கொடுப்பாயாக
பவிஞ்ச-அசுரப்படைக்கு
அஞ்சு கிட்டச்செய்யும்
அத-அழிவுக்குரிய
வாள்-வாட்போரின்
நலன்-வெற்றியுள்ள, வீரவாகு
அன்னோர்-ஒத்தவர் வாழும் வை
பழனி தனக்கு-பழனிப்பதிக்கு
அரசே-தலைமைக்கடவுளே 75

தனதனத் தானவேன் ருடிய நாதர் தழல்விழிச்சேய்
தனதனத் தானத்தந் தோயும் பழனித் தலைவன், அன்பர்
தனதனத் தான சிறத்தா மரைத்துணைத் தாள்விழைவார்
தனதனத் தானங்கள் வேண்டாரென் பாரது சத்தியமே.

தனதனத்தான-தனதனந்தான
என்று-என்னும்தாளவரிசைப்படி
ஆடிய-திருநடம் புரிந்த
நாதர்-சிவபிரானுடைய
தழல்-நெருப்பான
விழி-கண்களிலிருந்து வந்த
சேய்-முருகப்பெருமான்
தனதன்-குபேரன்
நந்து-விருப்புகின்ற
ஆனந்தம்-திருவருட்செல்வம்
தோயும்-அமையப்பெற்ற
பழனி-பழனித்தலத்துக்கு
தலைவன்-உரிமையான கடவுள்
அன்பர்-அடியவர்
தனது-தங்கட்கு
அன்-பொருத்தமானவன்
அத்து ஆன-சிவப்பாகிய
சிற-சிறந்தையுடைய
தாமரை-தாமரைப் பூவை ஒத்து
துணை-இரண்டாகிய
தாள்-திருவடிகளை
விழைவார்-வேண்டுமன்பர்கள்,
தன-பொன்னையும்
தன-தனங்களுடைய பெண்ணை
தானங்கள்-பூமியாகிய யும்
மூன்றையைகளை
வேண்டார்-விரும்பமாட்டார்
என்பார்-என்று சொல்வார்கள்
அது-அந்தச்சொல்
சத்தியமே-உண்மையேயாம்
ஏ-று. 76

சத்திய சாதன முள் ளார்செய் வேள்வித் தழல்வருமா
சத்திய சாதனச் சீர்சால் பழனித் தலைவ/திண்கைச்
சத்திய சாதனட் டார்க்கரி யாய்தமிழ்த் தத்தைபகர்
சத்திய சாதன வேடமிட் டேற்கிசை சற்றருளே.

சத்திய-உண்மையான
சாதனம்-தவ ஒழுக்கம்
உள்ளார்-உடைய நாரதர்
செய்-இயற்றிய
வேள்வி-யாகத்தின்
தழல்-தீயிலிருந்து
வரும்-தோன்றிய
மா-பெரிய
சத்தி-வலிமையுடைய
அசா-ஆட்டினை உள்ளவனே!
தனச்சீர்-செல்வச்சிறப்பு
சால்-மிகுந்துள்ள
பழனி-பழனியம்பதிக்கு
தலைவ-முதல்வரே!
திண்-திண்மையான
கை-கையில் ஏந்திய
சத்திய-வேற்படையினரே!
சாதல்-இறந்துபோதலை
நட்டார்க்கு-விரும்பி அலை பவருக்கு
அரியாய்-காணரியவனே!
தமிழ்-தமிழ்ப்பாப் பாடிய
தத்தை-கிளியான அருணகிரி நாதர்
பகர்-கூறும் அநுபூதியில்
சத்திய நிலையானவனே!
சாது-தவசிகளை
அ(ன்)ன-ஒப்பான
வேடம்-திருவேடத்தை
இட்டேற்கு-அணிந்த எனக்கு
இசை-ஏற்றத்தை
சற்றருள்-சிறிதேனும் தருவா
ஏ-று. ஏ-அசை. யாக.
77

சற்குரு தேசிகழ் கின்றார்க் கரிது, சடாக்கரநே
சற்குரு தேசிகண் டோல்குந் தனத்தார் தமக்கெளிதஞ்
சற்குரு தேசிகந் தார்சூழ் பழனித் தடங்கிரிக்கோ
சற்குரு தேசிகர் யாவரு மான தனித்தெய்வமே.

சத்-உண்மைப்பரத்தின்
குரு-வடிவமான, சகளத்தின்
தேசு-அருட்பொலிவை
இகழ்கின்றார்க்கு-வெறுப்பவர் கட்கு
அரிது-அரியபொருளானவன்
சடாக்கர-ஆறெழுத்தைச் செபிக்கும்
நேசர்க்கு-உபாசகர்கட்கும்
உரு-உருவத்தில்
தேசி-ஏலுமிச்சம்பழம்
கண்டு-பார்த்து
ஒல்கும்-நாணும் அழகுற்ற
தனத்தார்-தனமுடைய வள்ளி - தெய்வானை ஆகியோர்
தமக்கு-தங்கட்கு
எளிது-எளிமையாயிருப்பவன்
அஞ்சற்கு-அச்சமடைதற்கு
உறு-உரியதான
தேசு-மாதரமுகில்
இகந்தார்-மயக்கத்தை விட்ட தவசிகள்
சூழ்-நெருங்கிப் பணியும்படி
பழனி-பழனிப்பதியில்
தடம்-பரந்துகாணப்படும்
கிரி-மலையின்
கோ-தலைவனான முருகன்
சற்குரு மதத்தலைவராகிய
தேசிகர்-குருமார்கள்
யாவரும்-எல்லோரும்
ஆன-ஆகி விளங்கும்
தனி-ஒப்பற்ற
தெய்வம்-பரம்பொருளாவான்.
எ-று. ஏ-அசை. 78

தனித்தகந் தாங்கு முருகாமெய் யன்பர்கள் தாமறியத்
தனித்தகந் தா!பழ னுபுரிக் கோயிற் றலைவ! சகத்
தனித்ததந் தாயமன் னார்க்கஞ்சி வாடித் தயங்கினன்எத்
தனித்தகந் தாது பெரிதோங்கச் சற்று தயைசெய்தியே.

தனித்த-இன்பத்தில் இணையற்ற
கம்-வானகத்தேவரை
தாங்கு-காத்தருளிய
முருகா-முருகப்பெருமானே!
மெய்-உண்மையான
அன்பர்கள்-தொண்டர்கள்
தாம் அறிய-ஆவார் உணரும்படி
தனித்த-அந்தரங்கமாயுள்ள
கந்தா-கந்தக்கடவுளே!
பழனுபுரி-பழனித் தலத்தின்
கோயில்-பலகோயிலுக்கு
தலைவ-முதல்வனே!
சகத்து-உலகில்
அனித்த-நிலையற்ற
கந்தாய-வரிவசூலிக்கும்
மன்னர்க்கு-அரசர்கட்கு
அஞ்சி-பயந்து
வாடி-மனமெலிந்து
தயங்கினன்-வருந்தினேன்
எத்தனித்த-செய்யவிரும்பிய பணிகள்
கந்தாது-கெடாதபடியும்
பெரிது-மிகவாய்
ஓங்க-வளரும்படியும்
சற்று-ஒருசிறிது
தயை செய்தி-கருணை புரிக.
எ-று. ஏ-அசை. 79

தயவிலை யாமனை யான்மரு கா,சிவன் தன் விழியு
தயவிலை யாபழ னிக்குமரா! மெய்த்தவத் தர்தம்மி
தயவிலை யா அடி யேன்மிசை நிற்கோர் தவிடளவும்
தயவிலை யாஅன்று தானேவந் தாண்டதேன் சாற்றுதியே.

தயவு-கருணையுடன்
இலையாம்-ஆலிலையை
அணையான்-பாய் எனக் கொண்ட திருமாலின்
மருகா-மருகனே !
சிவன் றன்-சிவபிரானது
விழி-திக்கண்களால்
உதவிய-உதவப்பெற்ற
இல்-முத்திவீட்டின்
ஐயா-முதல்வனே !
பழனி-பழனியில் விளங்கும்
குமரா-குமாரக்கடவுளே
மெய்-உண்மையான
தவத்தர்தம்-தவசிகளது
இதய-மனவெளியில்
வில்-ஒளியுடன் விளங்கி
லயா-உணர்வில் ஒன்றுபடு பவனே
அடியேன்மிசை-என்னிடம்
நிற்கு-உனக்கு
ஓர் தவிடு-நுண்ணிய தவிட்டின்
அளவும்-அளவுங்கூட
தயவு-கருணை
இலையா-இல்லாமற்போயிற்று அப்படியானால்
அன்று-முற்காலத்தில்
தானே-என் முயற்சியின்றி
வந்து-நீயாகவே தோன்றி
ஆண்டது-என்னை ஏற்றது
என்-என்ன காரணம் ?
சாற்றுதி-சொல்லியருள்க !
ஏ.று. ஏ-அசை. 80

சாற்றிய வேதனை யந்தோய் பழனிச் சரவணசெஞ்
சாற்றிய வேதனை தீர்க்குந்தண் டாயுத! சந்ததம்செய்
சாற்றிய வேதனைத் துந்தெரி வாய்!எனைச் சண்டன்வெம்நச்
சாற்றிய வேதனை யன்கைய னாகத் தணந்திடலே.

சாற்று-திருவிழாக்களின்
இய-வாத்தியஒலிமிக்கதும்,
வேத-நால்வேதங்களின்
நயம்-கீதஒலிமுழக்கமும்
தோய்-உடையதான
பழனி-பழனியம்பதியில் உள்ள
சரவண-சரவணப்பெருமானே
செம்-செம்மையாயும்
சாற்று-சாரமாயும் உள்ள
இய-பிரணவப்பொருளானவனே !
வேதனை-அன்பர்க்குத் துன்பம் தருவதான பகையை
தீர்க்கும்-அறச்செய்கின்ற
தண்டாயுத-தண்டாயும் அணிந் தவனே
சந்ததம்-நாடோறும் (நான்)
செய்-செய்கின்றதும்
சாற்றிய-சொல்கின்றதுமான
ஏது-காரணங்கள்
அனைத்தும்-எல்லாவற்றையும்
தெரிவாய்-அறிந்துள்ளாய்
எனை அடியேனை
சண்டன் இயமனும்
வெம்-கொடிய
நச்சு-ஆசையை
ஆற்றிய-உண்டாக்குகின்ற
ஏதன்-குற்றமுடைய மன்மதனும்
அயன்-பிரமனும் ஆகிய இவர்களின்
கையன்-கைக்குஅடங்கியவ னென்று
ஆக-ஆகும்படி
தணந்திடல்-என்னைக்கைவிடக் கூடாது
ஏ.று. ஏ-ஈற்றசை. 81

பிரமனால் படைப்பு, மன்மதனால் காமச்செயல், இயமனால் இறப்பு இல்லாமல் ஆட்கொள்க.

தணவாத வாகன வேளோஞ் சுமார்வ தடம்புனத்தி
தணவாத வாகனந் தோய்வய லூர! சதுமுகவந்
தணவாத வாகனம் புந்தொண்டர் நெஞ்சில்தனித் துச்சொல்மந்
தணவாத வாகன சன்ம விடாயறத் தாக்குதியே.

தண்-குளிர்ச்சியான (தண்ணிய)
வாத-தென்றற்காற்றுன
வாகன-தேரைக்கொண்ட
வேள்-மன்மதனும்
ஒஞ்சும்-கண்டுநாணும்படியான
ஆர்வ-தோற்றமுடையவரே
தடம்-இடமகன்ற
புனத்து-தினைப்புனத்தில்
இதண்-பரண்மீது (காவலிலிருந்த
வள்ளிநாயகிமீது
அவா-விருப்பம்
தவா-நீங்காத
கனப்தோய்-பெருமைபொருந்திய
வயலூர-பழனிப்பெருமானே!
சதுமுக-நான்முகமுடைய
அந்தண-பிரமதேவன்பால்
வாத-தருக்கமிட்டுக்குட்டிய
வாக-திருக்கரமுடையவரே
நம்புந்-உண்மையோநம்பியுள்ள
தொண்டர்-மெய்யடியவரது
நெஞ்சில்-உள்ளத்தில்
தனித்து-தனியேதோன்றி
சொல்-உபதேசிக்கின்ற
மந்தண-மந்திரப்பொருளான
ஆதவா-ஞானசூரியனுவரே
கன-மிகுதியான
சன்ம-பிறவிதருவதாயுள்ள
விடாய்-ஆசைகள்
அற-என்னைவிட்டு ஒழியும்படி
தாக்குதி-எதிர்த்துஅருள்வாயாக
எ-று. ஏ-அசை

82

தாக்கணங் காசை மலிந்தேய்த்த ளேனைத், தயங்கவிட்டாய்
தாக்கணங் காசை யலர்போற் செறிக்தது தந்தருள்,சே
தாக்கணங் காசைக் கேடாதவி டேன்இது சத்தியம்,பி
தாக்கணங் காசையி லத்தாவி னன்குடி தங்கினனே.

தாக்கணங்கு-திருமகளின்
அருளான பொருளின்மீது
ஆசை-விருப்பம்
மலிந்து-மிகவுங் கொண்டு
(பெறுமல்)
எய்த்தேனை-இளைத்துள்ள
என்னை
தயங்க-திருவருள் பெறுமல்
வருந்தும்படி
விட்டாய்-சோதிக்கின்றனை,
தாக்கு-பிறரது வசைமொழியின்
தாக்குதல்
அணை-என்பாற் பொருந்த
காசைமலர்போல்-காயாம்பூவைப்
போல் (கருமையுடையதாய்)
செறிந்தது-மிகுதிப்பட்டது
தந்தருள்-செல்வப்பொருளை
உதவுதல் வேண்டும்
சேதா-பசுக்களின்
கணம்-கூட்டம் (அடைகின்ற)
காசை-துன்பப் பெருக்கை
கேடாது-இல்லாமல் அகற்றினு
லன்றி
விடேன்-என் தவமுயற்சியைக்
கைவிடமாட்டேன்
இது-இந்த மொழி
சத்திய-உண்மையாகும்
பிதா-தந்தையான சிவனது
கண்-கண்ணினின்றும் தோற்றிய
அங்கா-திருமேனியுடையவனே
சயிலத்து-மலையுடன் கூடிய
ஆவினன்குடி-திருவாவினன்
குடியான பழனியில்
தங்கினனே-எழுந்தருளிய
எ-று. பெருமானே

83

தங்கவில் லானை யுரியாதி கொண்டவிர் தாணு, தன
தங்கவில் லானைவு றுதண்டர் வாழத் தருங்குகன்ப
தங்கவில் லானைந்து வன்னம் பொலிதண் தமிழ்வயலூர்
தங்கவில் லானையப் பாட்டிசைத் தார்பல் தவத்தினரே.

தங்கவில்-பொன்மலையான வில்
ஆனை உரி-யானையின் தோலுடை
ஆதிகொண்டு-முதலியவற்றை
அவிர்-பூண்டு விளங்குகின்ற
தாணு ஒளிவடிவினரான சிவன்
தனது-தன்னுடைய
அங்க-திருமேனியின் (கண்வழி வந்த)
வில்லால்-தீப்பொறியால்
நைவு-உருது துன்பமடையாமல்
அண்டர்-தேவர்கள்
வாழ-நல்வாழ்வடைய
தரும்-உதவிய
குகன்-குகக்கடவுள்
பதங்க-மயிற்பறவையின் சாயலுடைய
இல்லான்-பச்சைநிற வள்ளி நாயகியை உடையவன்
ஐந்து-ஐந்து என்னும்
வன்ன பொலி-நிறங்களுடைய
தண்தமிழ்-குளிர்ந்த தமிழ்ப் பாக்களையுடைய
வயலூர்-பழனியப்பதியை
தங்க-தான் வசித்தற்கேற்றதான
இல்லான்-தலமாகக் கொண்டவன் ஆகிய முருகப்பெருமானை
அ-முற்கூறிய தமிழ்
பாட்டு-துதிப்பாடல்களால்
இசைத்தார்-பாடினார்கள்
பல்-அனேகமான
தவத்தினர்-தவமுடைய அன்பர்கள்
எ-று. ஏ-அசை. 84

தவசங்க மாகம வேதசித் தாந்தத் தனிநிலை தோய்ந்
தவசங்க மாகர்தம் போகம் வெறுக்கும் தகுதிநல்கெம்
தவசங்க மாகவின் குன்றுப் பழனித் தடங்கிரியாய்
தவசங்க மாகங் களத்தார்தம் மோகம் தலைக்கொண்டதே.

தவ-தவத்திற்கும்
சங்கம்-அடியவர் கூட்டத்திற்கும்
ஆகம-ஆகமங்கட்கும் (இவற்றின்)
வேத-நான்மறையின்
சித்தாந்த-சித்தாந்தங்கட்கும்
தனிநிலை-ஒப்பற்ற நிலைமை
தோய்ந்தவ-பெற்றமுதல்வனே
சங்க-கூட்டமான
மாகர்தம்-தேவர்களின்
போகம்-இன்பங்களை
வெறுக்கும்-கைத்துவிலக்குகின்ற
தகுதி-ஞானத்தை
நல்கு-கொடுத்தருள்வாயாக
எம்-எம்முடைய
தவ-சிறந்ததலைவனே
சங்க-அழகிய
மா-திருமகளின்
கவின்-பெரிய செல்வம்
குன்று-குறைதலில்லாத
பழனி-பழனியம்பதியின்
தடம்-இடமகன்ற
கிரி-மலைக்கோயிலுடைய
ஆதவ-சூரியனை ஒப்பவரே
சங்கம் ஆகு-சங்குபோன்ற
அம்-அழகிய
களத்தார்தம்-கழுத்துடைய மாதரது
மோகம்-இச்சை
தலை-மிகுதியாக
கொண்டதே-ஏற்பட்டதே.
எ-று. (என்ன செய்வேன்)

85

தலையா றுளப முடியோன் மருகன், தபனமுடித்
தலையா றுளவன், தவவேடங் கொண்டொரு தண்டணிசேய்
தலையா றுளவரு மைக்குரி யோன்,தினம் தன்பழனித்
தலையா றுளவறிந் தோர்வந்து வேண்டுவ தந்திடுமே.

தலை-பெருமைமிக்கதும்
ஆல்-அசைகின்றதும் ஆன
துளவ-துளசிமாலையை
முடியோன்-பூண்ட திருமாலின்
மருகன்-மருகனுயுள்ளவன்
தபன-பொன்னுலான
முடி-கிரீடங்களையணிந்த
தலை-சிரங்கள்
ஆறு உளவன்-ஆறு உடையவன்
தவவேடம்-தவசிவடிவத்தை
கொண்டு-ஏற்று
ஒரு-ஒப்பற்ற
தண்டு-தண்டாயுதத்தை
அணி-தாங்கிய
சேய்-முருகக்கடவுள்
தலை-தலைமையான
ஆறு-நதியான கங்கை
உள்-நினைக்கும்படியான
அவ்-அந்த
அருமைக்கு-தாயன்புக்கு
உரியோன்-உரிய கடவுள்,
தினம்-எப்போதும்
தன்-தன்னுடைய
பழனித்தலை-பழனியிடத்தில்
ஆறு-இறைவனை அடைதற்கான வழியையும்
உளவு-ரகசியத்தையும்
அறிந்தோர்-உணர்ந்தவர்கள்
வந்து-அடைந்து
வேண்டுவ-கேட்கும் வரங்களை
தந்திடும்-கொடுத்தருள்வான்
எ-று. ஏ-ஈற்றசை. 86

தந்தக் கரியளித் தாற்கட லாழி தரும்குகனைத்
தந்தக் கரியறி யாச்சில நூல்பகர் சற்குருவைத்
தந்தக் கரியற் கவியாற் பழனி தனிற்றுதித்துத்
தந்தக் கரிய பதம்பெற்ற வாறு சகஞ் சொல்லுமே.

தந்த-கொம்புகளையுடை
கரி-கஜேந்திர யானைக்கு
அளித்தாற்கு-அருளிய திருமாலு
அடல்-வலிமையுடைய க்கு
ஆழி-சக்கரப்படையை
தரும்-(தாருகாசுரனிடமிருந்ததை மீட்டு) உதவிய
குகனை-முருகப்பெருமானை
தந்து-அறிவாற்றல்மிக்கு
அக்கரி-அக்கரவடிவான நாமக
அறியா-அறியமுடியாத ட்கு
சில-சில அருளியலின்
நூல்-இலக்கண விதிகளை
பகர்-சொல்லியறிவிக்கின்ற
சற்குருவை-ஞான குருவானவனை
தந்து-கல்வியறிவான
அக்கர்-கண்ணுடைய புலவர்கள்
இயல்-தமிழினாலாகிய
கவியால்-துதிப்பாடல்களால்
பழனிதனில்-பழனியம்பதியில் சென்று
துதித்து-தோத்திரம் செய்து
தம்-தமது புண்ணியம்
தக்கு-நிலைபெறும்படி
அரிய-மேலான
பதம்-பதவிகளை
பெற்றவாறு-அடைந்த விதத்தை
சகம்-இந்த உலகம்
சொல்லும்-என்றும் கூறும்
எ-று. ஏ-அசை. 87

சகத்திர யத்து மிளிர்தென் பழனி தனைப்புகழ்ந்து
சகத்திர யத்துழ லாதுய்கை வேட்டுளேன், தாழ்வறுவஞ்
சகத்திர யத்தும் எனைஎள்ளி டேன்மின்; தயைமலிநெஞ்
சகத்திர யத்து விதத்தாற் றணக்கும் சரவணனே.

சக-உலகமாவன
திரயத்தும்-மூன்றிடத்தும்
மிளிர்-புகழ்விளங்குகின்ற
தென்-அழகிய
பழனிதனை-பழனித்தலத்தை
புகழ்ந்து-சிறப்பித்துப் பேசியும்.
சகத்திர-ஆயிரக்கணக்கான
எத்து-உலக மாயைகளில்
உழலாது-சிக்கிவருந்தாமல்
உய்கை-அருள் பெறுவதையும்
வேட்டுளேன்-விரும்பியுள்ளேன்
தாழ்வுஅறு-குற்றமற்றதும்
வஞ்சக-நம்பினவரை ஏமாற்றுவதுமான
திரு-பொருட்செல்வததால்
அயத்தும்-மறந்துங்கூட
எனை-அடியேனை
எள்ளிடேன்மின்-இகழ்ந்து ஒதுக்க வேண்டாம்
தயைமலி-கருணைமிகுயான
நெஞ்சகத்து-திருவுள்ளத்தால்
இரு-பெரிய நோயான
ஐ-ஆணவமலமாதியவற்றை
அத்துவிதத்தால்-தன்னுடன் உயிரை ஒன்றுபடுத்திக்கொள்ளுவதால்
தணக்கும்-போக்கியருளும்
சரவணனே-முருகப்பெருமானே
88

சரவணக் கஞ்சகிற் கொள்ளுமின் னாரடி தாழ்ந்தல்குல்நச்
சரவணக் கஞ்சமன் வேட்காட் படாத்தவம் தந்தருள்,குஞ்
சரவணக் கஞ்சடை கொண்டான் துணைவ! தடந்திரைநீர்ச்
சரவணக் கஞ்சத் துதித்தாய் பழனித் தமிழ்வள்ளலே.

சர-மாலைகளையணிந்தவரும்
வ(ண்)ண-பலநிறங்களிலான
கஞ்சு-மார்புக்கச்சையும்
அகில்-அகில்மணத்தையும்
கொள்ளும்-உடையவர்களான
மின்னார்-பெண்களின்
அடி-பாதங்களில்
தாழ்ந்து-விழுந்துவணங்கி
அல்குல் நிதம்பமான
நச்சு-விடமிக்க
அரவு-பாம்பை
அண-பொருந்தும்படி
கம்-பிரமன்
சமன்-எமன்
வேட்கு-மன்மதன்,என்பவர்களின்
ஆட்படா-ஆணைக்குஉட்படாதபடி
தவம்-உயர்ந்ததவவலிமையை
தந்தருள்-கொடுத்தருள்வீராக!
குஞ்சர-யானையின்
வண-அழகிய
கம்-தலையையும்
சடை-சடையையும்
கொண்டான்-உடையவனைபதியின்
துணைவ-தம்பியாவானே
தடம்-விசாலமானதும்
திரை-அலைவீசுவதும்ஆன
நீர்-நீர்நிறைந்த
சரவண-சரவணப் பொய்கையில்
கஞ்சத்து-தாமரைப்பூக்களில்
உதித்தாய்-தோன்றியவரே
பழனி-பழனியில்விளங்கும்
தமிழ்-தமிழ்மொழிக்குரிய
வள்ளலே-கொடைப்பெருமானே
என்று. 89

வள்ளத் தனத்தையன் போல்வாழ வேண்டி வழுத்தேனக்கு
வள்ளத் தனத்தைய மிட்டாய்நொந் தேன்என்று வாழ்விப்பையோ
வள்ளத் தனத்தைய! சீராவி னன்குடி வாண! கண்டு
வள்ளத் தனத்தைய லார்மனம் நாணும் மயிலப்பனே.

வள்-வளமானநீர்பொழியும்
அத்த-மேகம்போன்றவரும்
நத்து-சங்கணிந்தவருமான
ஐயன்-திருமாலை
போல்-ஒப்பாக
வாழ-உயிர்கட்குநலம்புரிந்து வாழும்படி
வேண்டி-விரும்பி
வழுத்து-உம்மைத்துதிக்கின்ற
எனக்கு-அடியேனுக்கு
வள் அத்து-வலிமையிழந்து
அனத்து-பிதற்றும்படியாக
ஐயம்-பலசந்தேகங்களை
இட்டாய்-உண்டாக்கினீர்
நொந்தேன்-வருத்தமுற்றேன்
என்று-எக்காலத்தில்
வாழ்விப்பையோ-நல்வாழ்வு பெறச்செய்வீரோ
வள்ளல் தனத்து-கொடைத் தன்மையில்
ஐய-தலைமையானவரே!
சீர்-சிறப்புவாய்ந்த
ஆவினன்குடி-திருப்பழனியின்
வாண-வாழ்வுடையவரே
கண்டு-உமதுவடிவைப்பார்த்து
வள்ள-கிண்ணம்போன்ற
தன-தனங்களையுடைய
தையலார்-மாதர்கள்
மனம்-உள்ளமானது
நாணும்-வெட்கும்அழகுள்ள
மயில்-மயில்வாகனமுடைய
அப்பனே-ஐயனே
எ-று. 90

மயில்வாக! னான்மறைச் சீருணர்ந் தார்சேய் மகமுதவு
மயில்வாக னாகணத் தெங்கணும் சென்று வருங்கலப
மயில வாக னா!பழ னாபுரிக் கோயில் வயிற்குலவு
மயில்வாக னானுணர் உண்மைபோய்த் தால்கிற்கு மானமின்றே.

மைஇல்-குற்றமற்றதும்
வாக-முறையானதும்ஆன
நான்மறை-நால்வேதங்களின்
சீர்-சிறப்பை
உணர்ந்தார்-அறிந்தமுனிவர்கள்
செய்-இயற்றிய
மகம்-வேள்வி
உதவும்-தோற்றுவித்த
மையில்-ஆட்டுக்கடாமீது
வா-வந்துகாட்சிகொடு
கனா-பெருமைமிக்கவனே
கணத்து-மிகவிரைவில்
எங்கணும்-எவ்விடத்திற்கும்
சென்றுவரும்-போய்த்திரும்பும்
கலப-தோகையுள்ள
மயில்-மயிற்பறவையான
வாகனா-ஊர்தியுடையவனே
பழனாபுரி-பழனித்தலத்துள்ள
கோயில்வயின்-கோயிலிடமாக
குலவும்-எழுந்தருளியிருக்கும்
அயில்-வேற்படையணிந்த
வாக-தோள்களையுடையவனே
நான்-அடியேன்
உணர்-உன்னையறிந்த
உண்மை-அநுபவங்கள்
பொய்த்தால்-நிறைவேறாவிடின்
கிற்கு-உன்திருவுள்ளத்தில்
மானம்-வெட்கமானது
இன்று-இல்லையென்பதுபுலப்படும்
எ-று. ஏ-அசை. 91

மானத்த னளித் தான் அடி யேனும்செய் வாஞ்சையுற்றேன்
மானத்த னனந்தம் ஈந்தருள் வாய்/விடை வாகனத்து
மானத்த னனத்து முற்றோற்றி னாய்/தொண்டர் வாழ்பழனி
மானத்த னை முருகா/என் பாற்சற்றும் வஞ்சியலே.

மா-திருமகளை
நந்தன்-விரும்புகின்ற திருமால்
ஆன்-பசுக்களை
அளித்தான் அன்று காத்தருளினன் (அதுபோல)
அடியேனும்-தொண்டனாகிய யானும்
செய்-இன்று காக்கத்தக்க
வாஞ்சை-பேராசையை
உற்றேன்-அடைந்துள்ளேன்
மால்-பெரிய ஆதலால்
நத்தன்-சங்கத்தை ஏந்திய அத் திருமாலின்
ஆனந்தம்-பேராற்றலை
ஈந்தருள்வாய்-எனக்கருள
விடை-இடபமாகிய வேண்டும்
வாகனத்து-ஊர்தியையுடைய வனும்
மான்-மானைத்தரித்த
அத்தன்-கையினையுடையவனுமாகிய சிவனது
ஆனத்து-முகத்தினிடமாக
முன்-முன்னொரு காலத்தில்
தோற்றினாய்-திருவுருக் கொண்டவரே
தொண்டர்-அடியவர்கூட்டம்
வாழ்-வாழ்தற்கிடமான
பழனி-பழனிப்பதியில்
மானத்தன் ஆன-பெருமைபெற்றவனாகிய
முருகா-முருகப்பெருமானே
என்பால்-அடியேனிடம்
சற்றும்-ஒருசிறிதும்கூட
வஞ்சியல்-வஞ்சகம் செய்யவேண்டாம்
எ-று. ஏ-ஈற்றசை. 92

வஞ்சிக்கு மாரகத் தார்பாலும் ஏற்ற மனமிளைத்தேன்
வஞ்சிக்கு மாரன்கணையாலும் நொந்துளன், வந்தருள்த
வஞ்சிக்கு மார கசியம் புனத்தில் வசித்தகுற
வஞ்சிக்கு மாரம் அளித்தாய் பழனி மலைக்குகனே.

வஞ்சிக்கும்-ஏமாற்றுதலையுடைய
மாரகத்தார் பாலும்-கொலைஞரிடமும் கூட
ஏற்று-பொருளைக்கேட்டு
மனம்-நெஞ்சம்
இளைத்தேன்-வருந்தினேன்
வஞ்சி-வஞ்சிமலருடும்
கு-சிந்தையான
மாரன்-மன்மதன்
கணையாலும்-மலரம்புகளாலும்
நொந்துளன்-வேதனைப்பட்டேன்
வந்து-முன்னிலைப்பட்டு
அருள்-திருவருள்புரியவேண்டும்
(உமது அருளில்லாமல்)
தவம்-மேலான தவநிலை
சிக்குமா-என்பால் எய்துமோ
ரகசியம்-அந்தரங்கமாக (களவியல் முறைப்படி)
புனத்தில்-தினைக்காட்டில்
வசித்த-காவல் காத்திருந்த
குற-வேடமகளான
வஞ்சிக்கும்-வள்ளிநாயகிக்கும்
ஆரம்-பூமாலையை
அளித்தாய்-அருளியவரே
பழனி-பழனித்தலத்தின்
மலை-மலையில் உள்ள
குகனே-குகக்கடவுளே
எ-று. 93

மலையனந் தத்துள வஞ்சேர்ந்து ளான்கண்ணில் வந்தவிர்ந்தாய்
மலையனந் தத்துள ஞானம் தெரிய வகுத்துரைத்தாய்
மலையனந் தத்துள் அணிசால் பழனி வரையில்எந்தாய்
மலையனந் தத்துளத் தைச்சுடல் தீர வரம்நல்கிடே.

மல்-வலிமை மிகுந்த
அயன்-பிரமனை,
அந்த-அழகிய
துளவன்-துளசிபூண்டமாயனை,
சேர்ந்துளான்-ஒன்று சேர்த்து விளங்கும் சிவபிரான்
கண்ணில்-கண்ணிவிடமாக
வந்து-தோன்றி
அவிர்ந்தாய்-விளங்கியவனே
மலையன்-பொதியை மலையை உடைய அகத்தியருக்கு
அந்தத்து-வேத முடிவில்
உள-உள்ளதாகிய
ஞானம்-பேருண்மையை
தெரிய-உணரும்படி
வகுத்து-விளக்கமாக
உரைத்தாய்-உபதேசித்தவனே
மலை-மலையென்றுள்ள
அனந்தத்துள்-பலவற்றாடும்
அணி-அழகு
சால்-மிகுந்தவிரும்
பழனி-பழனித்தலத்துள்ள
வரையின்-மலைமீது வசிக்கும்
எந்தாய்-எமது தந்தையே
மலை-அறிவைத் தியக்குகின்ற
அல்-அஞ்ஞான இருள்
நம்-எங்களுக்கு
தத்து-ஆபத்துக்கிடமாகி
உளத்தை-மனத்தை
சுடல்-வாட்டும் தீது
தீர-அகலும்படி
வரம்-ஒரு அருளுரையை
நல்கிடு-கொடுத்தருள்க
எ-று. ஏ-அசை. 94

வரத்தக்க ராகுல ராகத் திகழ்சித்தி வாழ்வுற்றுத்,தே
வரத்தக்க ராயவர் தம்மோடேற் சேர்த்தருள் மாய்வில்அன
வரத்தக்க ராசலத் தோழா! மலரில் வயங்கபய
வரத்தக்க ராபழ னித்திருக் கோயிலின் வானவனே.

வர-தெய்விகப் பண்பை
தக்கர்-அழிக்கும் கொடியவர்கள்
ஆகுலர் ஆக-கவலையுடையவ ராகும்படி
திகழ்-அடியேன் விளங்குதற் கேற்ற
சித்திவாழ்வுற்று-சித்திகளைப் பெறும் தன்மைபெற்று
தேவரது-தேவர்களுடைய
அக்கர் ஆயவர்-கண்போல் உள்ளவர்கள்
தம்மோடு-உடனுறையும்படி
எற்சேர்த்தருள்-என்னைக் கூட்டு வித்தல் வேண்டும்
மாய்வுஇல்-அழிதல்இல்லாத
அனவரத-நித்தியத்தன்மை யுடைய
கராசல-யானைவடிவினரான கணபதியின்
தோழா-துணைவராயுள்ளவரே
மலரில்-தாமரைப்பூப்போன்று
வயங்கு-விளங்குகின்றதாய்
அபய-அஞ்சலளிப்பதையும்
வரத-அருள்புரிவதையும் காட்டு கின்ற
கரா-திருக்கரங்களையுடையவரே
பழனி-பழனியில் உள்ள
திருக்கோயில்-அழகிய கோவி லின்கண் அமர்ந்துள்ள
வானவனே-தண்டபாணிப் பெருமானே
எ-று. 95

வானத் தரங்கம் புரப்போன் பழனி மலைக்குமரன்
வானத் தரங்கப் பெருமாள் மருகன், வழுவில்கன
வானத் தரங்கக் கடல்மாஅட் டோன்,தொண்டர்
[வாய்ச்சொல்விழை
வானத் தரங்கண் மணியான(து) ஈடின் மகத்துவமே.

வானத்தர்-தேவர்கள்
அங்கம்-ஆட்சியை
புரப்போன்-காத்தருளியவன்
பழனி-பழனியின்கண் உள்ள
மலை-மலையிற்கோயில் கொண்ட
குமரன்-குமரக்கடவுள்,
வால்-வெண்ணிறமான
நத்து-சங்கையணிந்த
அரங்க-சிரங்கத் தமர்ந்த
பெருமாள்-திருமாலுக்கு
மருகன்-மருமகனாயுள்ளவன்
வழுஇல்-குற்றமற்ற
கனவான்-பெருமை மிக்கவன்
அ-அந்த
தரங்க-அலையோடுகூடிய
கடல்-கடலில் தோன்றிய
மா-சூரனை மாமரத்தை
அட்டோன்-கொன்றருளியவன்
தொண்டர்-மெய்யன்பரது
வாய்ச்சொல்-அன்புரைகட்கு
விழைவான்-செவிசாய்க்கின்ற
அத்தர்-சிவபிரானது வல்
அம்-அழகிய
கண்-கண்களிடத்தில்
மணியானது-மணிபோல்தோற்றி
ஈடுஇல்-சமானமற்ற [யது
மகத்துவம்-சிறப்பாகும்
ஏ-று. ஏ-அசை. 96

மகவானை யாண்ட வயலூர னாதி மதலையன்றே
மகவானை யாண்ட வயலூர னாதி மதலையன்றே
மகவானை யாண்ட வயலூர னாதி மதலையன்றே
மகவானை யாண்ட வயலூர னாதி மதலையன்றே.

மக-இளமையின்
வான்-பெருமையும்
ஐ-ஐந்தாகிய
ஆண்ட-வயதையும் உடைய
அல்-மதிள்போலும்
ஊர-உரத்தினைப்பெற்ற
நாதி-நாதத்துவசம்பந்தன்,
மது-தேனால் ஆகிய
அலையன்-சமுத்திரமது
தேம்-இனிமை வாய்ந்த
அக-திருவுள்ளமுற்ற
ஆனை-தெய்வயானையின்
ஆண்-நாயகன்,
தவை-சேட்டைபோலும்
அல்-அஞ்ஞானஇருள்
ஊரன்-இவரப்படாதவன்,
ஆதி-முதன்மையான
மத-சமயத்தில்
லயன்-ஐக்கியப்படுகின்றவன்,
தே-தெய்வத்தன்மையுள்ள
மக-மகத்தான
வான்-ஆகாயத்தில்உள்ள
அயாண்ட-பிரமாண்டங்களின்
அயல்-சார்பில்
ஊர்-சலனத் தோடுற்ற
அநாதி-காலாதீத
ம-மாயையை
தலை-இடமாகக்கொண்டபொருள்
அன்றே-அல்லனே
மகவானை-இந்திரனை
ஆண்ட-ஆட்கொண்ட
வயலூரன்-பழனியாண்டவன்
ஆதி-சிவபிரானுடைய
மதலை-புத்திரன்.
ஏ-று. ஏ-அசைநிலை.

### கருத்துரை

இளமையிற் பெருமை பெற்று, ஐந்து வயதுப் பருவமாய் விளங்குகின்ற சுவாமியும், மதில்போன்ற நாததத்துவ சம்பந்தனும், தேன் சமுத்திரம் போன்ற திருவுள்ளமுற்ற தெய்வயானை நாயகனும், கெடுதலைச் செய்யும் அஞ்ஞான இருளைச் சுமக்காதவனும், முதன்மையான சமயத்தில் உடன்பாடுள்ளவனும் ஆனவொருவன், பரமாகாயத்திரகிடக்கின்ற பிரமாண்டங்களைச் சார்ந்த சலன சொருப மாயையை இடமாகக் கொண்டவ னல்லனேயல்லன். இந்திரனை ஆண்டு கொண்ட பழனியூரனும் சிவபிரான் புத்திரனுமானவன் என்பதாம்.

### ஞாயவுரை

முதிர்ந்த பருவத்தில் அடையத்தக்க ஞானத்தை, இளமையிற் சுயமாயடைந்தமையால் அதனிற் பெருமை பெற்றோனென்றும், சூரசங்காரத்தின் போதும், சமணரை வென்றபோதும், உற்றபருவமாதலின், ஐந்துவயதென்றும், மற்றெல்லாவற்றையும் கவர்ந்து நின்ற வியாபகத்தால். நாததத்துவம் மதில்போன்றதென்றும், வாய்ச் சொல்லினும் அதிநயம் பொருந்தினமைபற்றி, தேன் சமுத்திரம் போன்ற திருவுள்ளமென்றும், தன்னைச் சார்ந்தோர் அஞ்ஞானத்தையும் கெடுக்கின்றவனாதலின் அதனைச் சுமக்காதவனென்றும் எச்சமயத்தோராலும் இகழப்படாத குருத்துவமே தனது தொழிலாதலின், முதற்சமயத்தில் உடன்பாடென்றும். பிரஞ்சத்தோற்றமே மாயைக்காதாரம் ஆதலின். அதைச்சார்ந்த சலனத்ததென்றும், போகாதிபனை இந்திரனை ஆண்ட தன்மை, அதற்கு ஆதாரமான மாயைக்கு அதீதத்தை விளக்கும் என்றும், சிவபெருமானே நெற்றிக் கண்ணுற்ற பெற்ற தன்மையும் அங்ஙனமாகுமென்றும் அறியக்கடவர்.

### இலக்கணவுரை

முதல்வரியினும் இரண்டாம் வரியினும் ஐகாரம் போலியாய் நின்றது. உர என்னும் பதத்துள்ள உகரம், நீட்டல் விகாரம் பெற்றது உடைமைபற்றி நீட்டல் விதியெனக் கொள்வாரும் உளர். அதன் இதன் ஒன்றன் என்னும் பதநிலைப்படி "அலையின்" என்பது அலையன் எனநின்றது. அலையெனச் சமுத்திரத்தைச் சொன்னது பின்மொழித் தொகை, மூன்றும் வரியில் போலி ஐகாரமாய் நின்றது. ஊர்தல் சலனப்பொருள் தருதலும், தலையென்னும் முன்னிலை விளிபோலும் பெண்பாற்கிளவி அஃறிணைக்கும் வருமாறும், அஃது மதலைத்தன்மையாற் பொருந்தியவாறும் உணரும் புலவரும் இருப்பாரென ஐயமின்றும், அவ்ஊர் அலூர் ஆனது போலும் ஓசையெலிவு சாதாரணமான செய்யுள் வழக்காதலின் விரித்தெழுதாது விட்டனம். 97

மதலையளித் தவர் கொண்டாடும் சீர்த்தி வளவயலூர்
மதலையளித் தவற் கும்சுத்தஞானம் சொல் வாய்மலர்ச்சேய்
மதலையளித் தரை தொட்டுப்பொட் டிட்டுள்ள வாணுதல்எம்
மதலையளித் தகை யாரத்திற் கொள்வது வண்தமிழே.

*மதலை-நோன்பிற்குத் தூண் ஆக*
*அளி-கருணையையுடைய*
*தவர்-தவசிகளால்*
*கொண்டாடும்-போற்றப்படும்*
*சீர்த்தி-சிறப்புள்ள*
*வள-செழிப்புமிக்க*
*வயலூர்-பழனியில்உள்ள*
*மதலை-குமாரக்கடவுள்*
*அளித்தவற்கும்-தந்தையான சிவ*
*சுத்த-மேலான பிரானுக்கும்*
*ஞானம்-மெய்ப்பொருளை*
*சொல்-உபதேசித்தருளிய*
*வாய்மலர்-திருவாயினையுடைய*
*சேய்-முருகப்பெருமான்*
*மத-சமயங்கள் பலவற்றிலும்*
*லயன்-ஒன்றுபட்டுள்ள உமையவள்*
*இ-இந்த*
*தரைதொட்டு-நிலத்தைக் குழைத்து*
*பொட்டு-மண்திலகம்*
*இட்டுள்ள-அணியப்பெற்ற*
*வாள்-விளக்கமான*
*நுதல்-நெற்றியுடையவன்*
*மது-தேனை விரும்பி*
*அலை-செல்கின்ற*
*அளி-வண்டுகளின்*
*தகை-பெருமைமிக்க*
*ஆரத்தில்-மாலைகளைப்போல்*
*கொள்வது-ஏற்பது*
*எம்-எம்போன்றோரது*
*வண்-வளப்பமிக்க*
*தமிழே-தமிழ்ப்பாடல்களையே ஆகும்*
*எ-று.*

98

வண்டலங் காரணத் திற்பிறந்தார் சொல் வதும் மிகத்து
வண்டலங் காரஞ்செயச் சோர்ந்து ளாரையும் வாழ்விப்பது
வண்டலங் காரக் கடம் பன்றன் ஆடல் மலிவது,நீர்
வண்டலங் காரவயலா வினன் குடிமால் வரையே.

*வண்-வளப்பமிக்க*
*தலம்-பூமியிடத்து*
*காரணத்தில்-உலகநன்மைக்கு உரியவராக*
*பிறந்தார்-அவதரித்தமேலோர் களால்*
*சொல்வது-புகழப்படுவதும்,*
*மிக-அதிகமாக*
*துவண்டு-தளரும்படி*
*அலம்-துன்பம்பலவும்*
*காரம்செய-மனத்தை வருத்துவ தால்*
*சோர்ந்து-ஆக்கமின்றி*
*உளாரையும்-வ ம் பவரையும்*
*வாழ்விப்பது-நல்வாழ்வுபெற வைப்பதும்,*
*வண்டு-தேனீ மொய்க்கும்படி*
*அலங்கு-அசைகின்ற*
*ஆர-மாலைகளான*
*கடம்பன்-கடம்பமலரான் ஆகிய*
*தன்-அப்பெருமானுடைய*
*ஆடல்-திருவிளையாடல்களை*
*மலிவது-மிகுந்திருப்பதும்*
*நீர்-வெள்ளத்தால் ஆகிய*
*வண்டல்-வண்டல்படிந்து*
*அம்-அழகிய*
*கார்-கரியமேகம்சூழ்ந்ததும்*
*வயல்-கழனிச்சிறப்புற்றுள்ள*
*ஆவினன்குடி-பழனிப்பதியில்*
*மால்-பெரியதுமாகி விளங்கும்*
*வரையே-மலையேயாகும்*
*எ-று.*

99

மாலவ னத் தத்தை வெல்மாண் புதவும், மயிற்குகன்சீர்
மாலவ னத் தத்தை போலப் பழனியில் வாழ்த்துனர்பால்
மாலவ னத் தத்தை யல்சூழ் மிடியற வந்தணைவாள்
மாலவ னத் தத்தை யங்குங் கமல மலர்த் திருவே.

மால்-பெரிய
வன-மயானத்தையடையும்
தத்தை-இறப்பானபேராபத்தை
வெல்-வராமல்வெல்லத்தக்க
மாண்பு-தவச்சிறப்பினை
உதவும்-பெறக்கொடுக்கும்
மயில்-மயில்வாகனமுடைய
குகன்-முருகப்பெருமானது
சீர்-புகழைப்பாடும்
மால்-விருப்பத்தைக்கொண்டு
வன-அழகுடனுமிருந்த
தத்தைபோல-அருணகிரிநாத
ரானகிளியைப்போல
பழனியில்-பழனியம்பதியில்
வாழ்த்துனர்பால்-துதிப்பவரிடம்
மால-மயக்கத்தைத்தருகின்ற
அனத்த-இன்னலைஉதவும்
தையல்-மூத்தவளால்
சூழ்-வருவதான
மிடி-வறுமைப்பிணி
அற-அற்றொழியும்படி
வந்து-குடியாகவந்து
அணைவாள்-தங்குவாள்யாரெனில்
மாலவன்-திருமால்
நத்த-விரும்பும்படி
தயங்கும்-ஒளிசெய்யும்
கமல-தாமரையாகிய
மலர்-பூவில்வாழும்
திரு-திருமகளாவாள்
எ-று. ஏ-அசை 100

யமக அந்தாதி முற்றிற்று.

---